# எண்பதுகளில் தமிழ் நாவல்கள்

ஞானி



விஜயா பதிப்பகம்

நீரா 94

# எண்பதுகளில் தமிழ் நாவல்கள்

ஞாணி

விஜயா பதிப்பகம்
20. இராஜ் வீதி
கோவை 641001

| | | |
|---|---|---|
| நூல் | : | எண்பதுகளில் தமிழ் நாவல்கள் |
| ஆசிரியர் | : | ஞானி (கி. பழனிச்சாமி) |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| முதற் பதிப்பு | : | டிசம்பர் 94 |
| அட்டை அமைப்பு | : | ஓவியர் ஜீவா |
| வெளியீடு | : | விஜயா பதிப்பகம், 20, இராச வீதி, கோவை 641001 |
| விலை | : | ரூ. 16/- |



அச்சமைப்பு : வைகை அச்சகம் 30 பத்மநாபநகர்
சூளைமேடு சென்னை 94 தொ. பே. 428963

# பதிப்புரை

தமிழில் தரமான படைப்புகளும் திறனாய்வுகளும் வெளிவர வேண்டும் என்பது எனது தணியாத வேட்கை. இந்த நோக்கத்தோடு விஜயா பதிப்பகம் இதுவரை பல அறிவு நூல்கள் மற்றும் இலக்கியப் படைப்புகளை வெளியிட்டு வருவதை தமிழ் வாசகர்கள் நன்கு அறிவார்கள்.

அண்மைக் காலத்தில் தமிழின் ஆக்கம் குறித்து நாம் பெரிதும் அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டிய சூழல் ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சூழலில் படைப்பு முயற்சிகளோடு, திறனாய்வுச் செயல்பாடுகளுக்கும் தேவை அதிகரித்துள்ளது. திரு பொன்னீலன் அவர்களின் 'புதிய தரிசனங்கள்' நாவல் பற்றிய கட்டுரைத் தொகுப்பை வெளியிட்ட கையோடு, நண்பர் ஞானி அவர்கள் எழுதிய 'எண்பதுகளில் தமிழ் நாவல்கள்' பற்றிய கட்டுரைத் தொகுப்பை வெளியிடுவதில் விஜயா பதிப்பகம் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறது.

தமிழின் ஆக்கத்தோடுதான் நமக்கான வாழ்வு உண்டு என நம்பும் தமிழ் வாசகர்கள், எங்கள் முயற்சிக்கு ஆதரவு அளிப்பார்கள் என்பதில் எங்களுக்கு ஐயமில்லை.

நூலை அழகாக அச்சிட்டுத் தந்த வைகை அச்சகத்தாருக்கும் நூலின் முகப்பை அழகோடு அமைத்த ஓவியர் திரு. ஜீவா அவர்களுக்கும் விஜயா பதிப்பகத்தின் சார்பில் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள்

1-12-94

மு. வேலாயுதம்

# முன்னுரை

தொண்ணூறுகளின் தொடக்கத்தில் நண்பர் சந்திர சேகரன் (சரவணபாலு பதிப்பகம்) அவர்கள் 'எண்பது களில் தமிழ் நாவல்கள்' பற்றி சென்னையில் ஒரு கருத் தரங்கிற்கு ஏற்பாடு செய்திருந்தார். கருத்தரங்கிற்காக நான் ஒரு சுருக்கமான கட்டுரை எழுதினேன். நண்பர் சந்திரசேகரன் கேட்டுக் கொண்டதின் பேரில், மேலும் சில நாவல்களைப் படித்ததோடு ஒவ்வொரு நாவல் பற்றியும் தனித்தனியே எழுதினேன். தமிழில் நாவலாசிரியர்கள் அனைவரது நாவல்களையும் நான் தொகுத்து வைத்துக் கொள்ளவில்லை. சிலருடைய நாவல்களை நான் தொடக் கத்திலிருந்தே படிக்கவுமில்லை. முக்கியமான சில எழுத் தாளர்களின் அனைத்து நாவல்களும் கூட என்னிடமில்லை. இவற்றை பிறரிடமிருந்து பெற்றுப் படிப்பதற்கும் கால அவகாசமோ, வாய்ப்போ இல்லை.

இந்த நிலையில், 92 தொடக்கத்தில் இந்தக் கட்டு ரைத் தொகுப்பை உருவாக்கினேன். தமிழில் இவ்வகைத் தொகுப்பின் தேவையை தமிழ் வாசகர்கள் மற்றும் திறனாய்வாளர்கள் உணர முடியும். அங்கங்கே எனது திறனாய்வுக் குறிப்புக்கள் இடம் பெற்ற போதிலும், எண்பதுகளின் தமிழ் நாவல்கள் பற்றிய ஒரு அறிமுக நூலாகவே இந்த நூலைக் கருதுவது பொருந்தும். எண்பதுகளில் தமிழ் நாவல்களின் எண்ணிக்கை சில நூறு களாவது இருக்கக்கூடும். இந்த நூலில் 65 நாவல்கள் மட்டுமே அறிமுகம் அல்லது ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன. குறைகள் வெளிப்படையானவை. ஒரு வேளை இரண்டாம் பதிப்புக்கு வாய்ப்பு நேருமானால் குறைகளில் பெரும்பகுதி தவிர்க்கப்படும் என்பதற்கு மேல் இப்பொழுது நான் சொல்வதற்கில்லை. இத்தகைய

முயற்சிகளில் இன்னும் சிலராவது சேர்ந்து கொள்ள வேண்டும்.

நாவல் பற்றி - குறிப்பாக தமிழ்நாவல் பற்றி எனது பார்வையை இந்த நூலின் தொடக்கத்திலும் இறுதியிலும் உள்ள பொதுக் குறிப்புகளில் குறிப்பிட்டுள்ளேன். நூலின் இடையிலும் அங்கங்கே தருகிறேன். நாவல் படைப்பிலும் வாசிப்பிலும் புதிய அணுகுமுறைகள் தமிழில் அறிமுகமாகி வருகின்றன. வரலாறு, மெய்யியல் என்ற தளங்களோடு எனது பார்வை இயங்குகிறது. கதைகளைக் காட்டிலும் மனிதர்கள் மீதுதான் என் கவனம் பதிந்திருக்கிறது. இவை எனது வரையறைகள். இந்த வரையறைகளிலிருந்து முற்றாக விடுவித்துக் கொள்வது எனக்கு சாத்திய மில்லை.

தமிழ்ச் சமூகத்தின் இயக்கத்தை நாம் விரும்புகிறோம். நாவல் படைப்பும், படிப்பும், திறனாய்வும் தமிழ்ச் சமூகத் தின் இயக்கத்தோடு ஒத்துச் செல்லும், ஒத்துச் செல்ல வேண்டும். எனது வாசிப்பின் வரையறைகளிலிருந்து விலகி, விடுபட்டு வாசகர்கள் மற்றும் திறனாய்வாளர்கள் செல்ல முடியும் / செல்ல வேண்டும், இத்தகைய இயக்கத் திற்கு எனது நூல் ஒரு தூண்டுதலாக அமையக்கூடும்.

தமிழில் திறனாய்வு வளர்ச்சி கருதி நூல்களை வெளி யிட விருப்பம் கொண்டுள்ள திரு. மு. வேலாயுதம் அவர்கள் எனது நூலை வெளியிட முன் வந்தமைக்கு என் மனம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனது முயற்சிகளில் என்னோடு ஒத்துழைக்கும் நண்பர் களுக்கும் எனது நன்றிகள் உரியவை.

கோவை தங்கள்

1-12-94 ஞானி

## உள்ளடக்கம்

# எண்பதுகளில் தமிழ் நாவல்கள்

## சில பொதுக் குறிப்புகள்

1. எழுபதுகளில் கலை இலக்கியம் என்று 'இலக்கு' கலாச்சார அமைப்பு நடத்திய கருத்தரங்குகளின் தொடர்ச்சியாக தற்கால தமிழ் இலக்கியத்தில் எழுபதுகள், எண்பதுகள் என்ற சொல் புழக்கத்தில் வந்திருக்கிறது. சொல் மட்டுமல்லாமல் பத்தாண்டுகளுக்கு ஒருமுறை தமிழிலக்கியப் போக்கு, வளர்ச்சி பற்றிய மதிப்பீடுகளும் இதன் தொடர்ச்சியாகவே நடைபெறுகின்றன. ஒரு மொழியின் இலக்கியப் போக்கைத் தீர்மானிக்கப் பத்தாண்டுகள் போதாது என்பது வெளிப்படை. எனினும் பத்தாண்டுகள் என்ற கால அளவுக்குள்ளேயும் மாறிவரும் சில அம்சங்களைக் கவனிக்க முடியும். தவிர இலக்கியப் போக்கைத் தொகுத்துக் கொள்வதற்கும் இது ஒரு வசதி.

2. 1980 முதல் 89 முடிய பத்தாண்டுகளில் எழுதி நூல் வடிவம் பெற்ற நாவல்கள் பற்றிய தொகைக்கணக்கும், விவரங்களும் நாம் தொகுத்துக் கொள்ளவில்லை. தமிழ் மொழியின் ஆக்கத்தில் அக்கறை உடைய ஓரினம், இத்தகைய தொகைக் கணக்கைச் செய்து கொள்ளும். தமிழில் இத்தகைய செயல்முறை நடைபெறுவதில்லை. இதற்கான காரணங்களுக்குள் இப்பொழுது செல்ல வேண்டியதில்லை. திரு. தி. க. சி. அவர்கள் தொகுத்துள்ள இருநூறு நாவல்கள் அடங்கிய பட்டியலைப் பார்க்கிற

பொழுது எத்தனையோ நாவல்கள் விடுபட்டுள்ளதை உடனடியாக அறியலாம். என்னைப் பொறுத்தவரை, நான் சேகரித்துப் படித்த சுமார் நூறு நாவல்களை வைத்து இக்கட்டுரை எழுதுகிறேன். பத்திரிகைத் தன மான / வணிகக் கலாச்சாரத்தோடு முற்றாக ஒத்தோடும் நாவல்களை நான் படிக்கவில்லை. வெளிவந்த அனைத்து நாவல்களையும் சேகரிக்கவோ படிக்கவோ எனக்கு இயல வில்லை. என்னைப் போல பலரது படிப்பும் மதிப்பீடும் மேலும் இங்கு தேவைப்படுவதை நாம் ஒப்புக்கொள்ள முடியும்.

3. அறுபது / எழுபதுகளில் நாவலாசிரியர்களாக நிலைபெற்று, எண்பதுகளில் தொடர்ந்து எழுதுபவர்களின் நாவல்களோடு, எண்பதுகளில் புதியதாகத் தெரியவந்த எழுத்தாளர்களின் நாவல்களையும் இங்கு எடுத்துக் கொள் கிறேன். எண்பதுகளில் அகிலன், நா. பார்த்தசாரதி, தி. ஜானகிராமன், ஆதவன், க. நா. சு., கே. டேனியல் ஆகியவர்களின் மறைவை இங்கு குறிப்பிட வேண்டும். அகிலனும் நா. பா. வும் தொடக்க காலம் முதல் நாவல் எழுதிய நெறியிலிருந்து இறுதிவரை மாறவில்லை. கதை சொல்வதும், அவர்கள் பார்வையில் சமூகத்திற்கு அறி வுரை சொல்வதும், காதலை மையமாகக் கொண்டு கதை யின் பிற நிகழ்ச்சிகளை இந்த மையத்திற்குள் இழுத்துக் கட்டுவதும், அங்கங்கே அரசியல் பற்றிய விமரிசனங் களைத் தருவதும் இவர்களது நாவலாக்க முறை. இந்த முறை, கல்கியின் தொடர்ச்சி. இந்த முறை, இன்றும் செயல்படுகிறதென்றாலும், இதிலிருந்து முற்றி லும் வேறான நாவலாக்க முறைகளும் எண்பதுகளில் செயல்பட்டுள்ளன. தி. ஜானகிராமன், ஆதவன் ஆகிய வர்களின் இறப்பு, தமிழ் நாவல் களத்தில் முக்கியமான இழப்பு. தி. ஜானகிராமன், நேர்த்தியாக நாவலில் இடம் பெறும் அனைத்து மனிதர்களுக்கும் மரியாதை கொடுத்து அவரவர்க்கான வாழ்க்கைப் பின்னணியைச் சரிவரத் தொகுத்து கதை சொல்பவர். ஆதவன், வாழ்வியல்

பற்றி சில புதிய நுட்பமான பார்வைகளை நாவலுக்குள் கொண்டு வந்தவர். தமிழில் தலித் இலக்கியத்தைத் தன்னளவில் படைக்கும் முழுமையான முயற்சியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர் டேனியல். க.நா.சு., தமிழ் நாவலின் களத்தை விரிவு செய்யும் முறையில் இறுதிக் காலததிலும் நாவல் எழுதினார். இவர்களின் இழப்பை நாம் மரியாதையோடு நினைவு கூரக் கடமைப் பட்டுள்ளோம்.

4. எண்பதுகளின் நாவலாக்கத்தில் சில நெறிகள் குறிப்பிடத்தக்கவை. (1) தி. ஜானகிராமனின் நாவலாக்க முறை பல முனைகளும் கவனமாகச் சேர்த்துப் பின்னப்படும் முறை. மனிதர்களுக்கும் வாழ்வியல் சிக்கல் களுக்கும் முக்கியத்துவம் தருவது இந்த நெறி. ஒரு கலைப்படைப்பின் நேர்த்தி முழு அளவில் இந்நெறியில் தெரிய வருகிறது. தி. ஜானகிராமன் சாதனையைப் பிறர் எட்டவில்லை என்ற போதிலும் ஒருசிலர் இந்த நெறி யில் தொடர்ந்து ஊன்றியிருக்கின்றனர் என்பதைக் குறிப் பிட வேண்டும். (2) இந்நெறியிலிருந்து வேறுபட்ட இன் னொரு நெறி கதைக்கு முக்கியத்துவம் தருவதில்லை. இந்த நெறி மனிதர்களுக்கு முக்கியத்துவம் தருகிறது. மனி தர்களைச் சுற்றிலும் நிகழ்ச்சிகள் குவிக்கப்படுவதில்லை. சமூகத்தின் ஒருமை சிதைந்த நிலையில், சமூகத்திலிருந்து பின்னப்பட்டு, தமக்குள்ளும் பின்னப்பட்ட மனிதர்களின் கதை சொல்வது இந்த நெறி. முதன்மையாக அசோக மித்திரன், சா. கந்தசாமி ஆகியவர்கள் இந்நெறி சார்ந் தவர்கள். நாவல் முழுவதும் ஒருங்கிணைந்தகதை என் றில்லாத நிலையில், பல மனிதர்களின் அவரவர்க்கான கதையோடு நாவல் நடைபெறுவதையும், இதன் தொடர்ச் சியாக நாம் கவனித்துக் கொள்ளலாம். அசோகமித்திர னின் 'ஒற்றன்', சங்கரநாராயணனின் 'மானுட சங்கமம்' ஆகிய நாவல்கள் இந்தப் போக்கிற்கு உரியவை. (3) மேலும் ஒரு நெறி. முன்னையவற்றிலிருந்து பெரும்

பாலும் வேறுபட்டது. நாவலில் சொல்லப்படும் கதை, தொடர்ச்சியாக இல்லாமல் முன்னும் பின்னும் மாறி இயங்குவதை நாம் அறிவோம். இப்படி முன்னும் பின்னுமாக மாற்றி அமைப்பதற்கு வாசகர் என்ற முறையில் நாம் பழக்கப்பட்டிருக்கிறோம். இந்த அமைப்பையும் சிதைத்து, வாசகனின் மனநிலைக்குள் உச்ச அளவில் வாசிப்பையும், உணர்வையும் கிளறும் முறையில் எழுதப் பட்ட சில நாவல்களின் இயங்குமுறை தமிழுக்கு புதியது. 'ஜே. ஜே. சில குறிப்புகள்' 'ஏற்கனவே சொல்லப்பட்ட மனிதர்கள்' 'எக்ஸிஸ்டென்சியலிசமும் ஃபேன்சிபனி யனும்' ஆகியவை இத்தகைய இயங்குமுறை கொண்ட நாவல்கள். ஆயினும் முன்னைய நெறியின் தொடர்ச் சியை இந்த நாவல்கள் முற்றாக மறுப்பதில்லை.

5. (1) நாவலில் சமூகம் இடம்பெறுவது என்பது தவிர்க்க இயலாது. சமூக வாழ்வு பல பரிமாணங்களை யும் வரலாற்றுச் சூழலுக்கு ஏற்ப மாற்றங்களையும் கொண்டு நடைபெறுவது. எழுத்தாளர்கள் சமூக வாழ் வின் அனைத்துப் பரிமாணங்களோடும் வரலாறு பற்றிய கணிப்போடும் இருப்பது தேவை என்பதை பலரும் ஒப்புக் கொள்ள முடியும். ஆனால் எழுத்தாளர்கள் வாசகர்களின் எதிர்பார்ப்புக்கு ஏற்ப இயங்குவதில்லை. அவரவர் வாழ்க்கைக்குள்ளிருந்து, அவரவர் சமூக அனுபவங்களை வைத்து, பல சமயம் நாவல் எழுதுகிறார்கள். ஒருசிலர் தம் இளமைக் காலத்து அனுபவங்களை மட்டும் வைத்து எழுதுகிறார்கள். சமூக இயக்கத்தைப் பெருமளவு பாதிக் கிற அரசியல், வரலாற்று நிகழ்ச்சிகளை, அவற்றின் முழுப்பரப்பில் புரிந்து கொண்டு படைப்புகள் இயற்றக் கூடிய எழுத்தாளர்கள் மிகவும் குறைவு. எழுபதுகளின் மத்தியில் இந்திய அரசியலைப் பாதித்த நெருக்கடி நிலை பற்றி நாவல் எதுவும் இல்லை. உலக அளவில் சோச லிசம் நெருக்கடிக்குள்ளாகி வந்தது பற்றி நாவல் இல்லை. ஓர் அரிய விதிவிலக்கு, இந்திரா பார்த்தசாரதியின் 'ஏசு

வின் தோழர்கள்'. தமிழ்நாட்டின் வட்டாரங்கள் தோறும் சென்று, அந்தந்த வட்டாரத்து உழவர்கள், மீனவர்கள் என்று பல வகைத் தொழிலாளர்களின் வாழ்வினை ஆதாரமாகக் கொண்டு, தொடர்ந்து நாவல் எழுதுபவர் ராஜம் கிருஷ்ணன் ஒருவர் மட்டுமே. தமிழ்நாட்டின் வெவ்வேறு வட்டார சமூக வாழ்வின் சித்தரிப்புகள் தமிழ் நாவலுக்குத் தேவை. நாமக்கல் வட்டாரத்தின் மாத்வரின் சமூக வாழ்வை விட்டல்ராவ் நுணுக்கமாகச் சித்திரித்துள்ளார். இவ்வகையில் நாவலாக்கத்திற்கு பற்பல களங்கள் தமிழகத்தில் உள்ளன. கல்வராயன் மலை மலைவாழ் மக்களின் வாழ்க்கை பற்றி சமுத்திரம் சுருக்கமாகவும் கொல்லி மலை மலைவாழ் மக்கள் பற்றி சின்னப்ப பாரதி விரிவாகவும் சித்தரித்துள்ளனர் (2) தமிழில் சமகால வரலாற்று நாவல்கள் என்பவை மீண்டும் கல்கி பாணியிலேயே எழுதப்படுகின்றன. இவை நாவல்களாகவும் இல்லை. வரலாறாகவும் இல்லை. சமகால வரலாற்று நாவல்கள் எழுதுவதற்கு தமிழகத்தில் சாதமான நிலைமை இல்லை. பெரும்பான்மையாக எழுத்தாளர்கள் அரசியல் சக்திகளுக்கு அஞ்சித்தான் வாழவேண்டியிருக்கிறது. மார்க்சிய வட்டாரத்தினரையும் இதில் விதிவிலக்காகக் கொள்வதற்கில்லை. சமகால வரலாற்று நாவலுக்கு மீண்டும் இலங்கை எழுத்தாளரைத் தான் நாட வேண்டியுள்ளது. (3) தமிழில் தலித் நாவல் என்று மனநிறைவோடு சிவகாமியின் 'பழையன கழிதலும்' நாவலைக் குறிப்பிடலாம். இங்கும் இவருக்கு முன்னரே, தலித் நாவலில் சாதனை நிகழ்த்தியவராக இலங்கை எழுத்தாளர் டேனியலைக் குறிப்பிட முடியும். (4) பெண்ணியப் பார்வை தமிழ் நாவலுக்குள் எண்பதுகளில் விரிவாகவே இடம் பெற்றிருக்கிறது. குடும்பம் என்ற களத்திற்குள் இன்னும் மையம் கொண்டிருக்கும் தமிழ் நாவல்களில் இது மிக முக்கியமான. வித்தியாசமான பார்வை. (5) நாவல் என்பது முதன்மையாக ஒரு கலை. இந்த நோக்கில் தமிழ் நாவல்களில் சோதனை முயற்சிகள் சிலவேனும் நடைபெற்றுள்ளன. அமைப்பியல் நோக்கில்

நாவல்கள் ஆராயப்படுவதும் படைப்பில் சில முயற்சிகள் மேற்கொள்ளப்படுவதையும் நாம் கவனிக்கலாம். (6) தமிழ் நாவலாக்கத்திற்கு மார்க்சியம் இந்தப் பத்தாண்டுகளில் பெரிய சாதனை எதையும் தந்து விடவில்லை. கலை நேர்த்தியிலும், வாழ்க்கை பற்றிய பார்வையிலும் மார்க்சிய வட்டாரத்தினுள் குறிப்பிடத் தக்க ஒருவர் பூமணி.

இந்தப் பொதுக் குறிப்புகளை அடுத்து, எண்பதுகளில் தமிழ் நாவலாசிரியர்களின் படைப்புக்களை முன்னவர், புதியவர் என்ற முறையில் தொடர்ந்து ஒவ்வொருவராகப் பார்க்கலாம். (7) முன்னைய சமூகத்தில் காவியம் பெற்றிருந்த இடத்தை நம் கால சமூகத்தில் நாவல் பெறுகிறது. இம்முறையில் சமூக வாழ்வின் அனைத்துக் களங்களுக்குள்ளும் நுழைந்து வாழ்வின் அர்த்தங்கள் தேடுவதும், அர்த்தங்கள் அழிந்துவிட்ட நிலையில் வாழ்வின் அவலம் சொல்வதும், எதிர்கால நோக்கில் வாழ்வின் நிறைவை எடுத்துக்காட்டுவதும் நாவலின் செயற்பாடுகள். இறுகிக் கிடக்கும் யதார்த்தத்தை கலை உணர்வின் இயக்கத்தின் போது, நெகிழ்த்தி, அகத்தினுள்ளும் புறத்தினுள்ளும், முன்னும் பின்னுமாக இயங்கும் அகண்ட வாழ்வை நாவல் என்னும் கலை வெளிப்படுத்துகிறது. கூடிய வரை இந்தக் கவனத்தோடு எண்பதுகளின் நாவல்களைப் படிப்பதையும் மதிப்பிடுவதையும் நமக்கு நோக்கமாகக் கொள்ளலாம்.

## க.நா.சு. 1

எண்பதுகளில் க.நா.சு.வின் நான்கு நாவல்கள் வெளி வந்துள்ளன. இவை ஐம்பது அல்லது அறுபது

களில் எழுதப்பட்டனவாக இருக்க வேண்டும். இவற்றை எண்பது காலச்சூழலில் வைத்துத்தான் நாம் படிக் கிறோம்.

கருத்துக்களைச் சொல்வதற்காக நாவல் தேவை யில்லை என்பதில் அழுத்தமான கொள்கை உடைய வராக க. நா. சு. சொல்லிக் கொண்டாலும் **கோதை சிரித்தாள்** நாவல் பெரும்பாலும் அவரது கல்விச் சிந்தனைகளைச் சொல்வதற்காக எழுதப்பட்ட நாவல். அமெரிக்காவில் தொழில் நுட்பத்துறையில் உயர் சாதனைகள் புரிந்த ராமானுஜம், அமெரிக்காவின் பொருளியல் நாகரிகத்தை வாழ்க்கையை வெறுத்து, தமிழ்நாட்டில் தன் கணித ஆசிரியரின் கிராமத்தைத் தேடி வந்து வாழ்வின் நிறைவைப் பெற முனைகிறான். கணித ஆசிரியர் இப்பொழுது ஓய்வு பெற்று பெருமாள் கோவில் அர்ச்சராக வாழ்கிறார். இரு கலாச்சாரங்களை எதிர்த்துருவப்படுத்தி நிறுத்தும் போது, அமெரிக்கக் கலாச் சாரத்தினுள் இயங்கும் பொருளியல் நாகரிகம் அவனுக்கு ஏன் நிறைவு தரவில்லை என்பது பற்றியோ, இந்திய நாகரிகம் என்பதன் எதிர்மறைப் பண்பு அவனைப் பாதிக்கும் என்பது பற்றியோ அக்கறை இல்லாமல், இராமானுஜத்தினுள் நடைபெறும் போராட்டத்தின் ஒற்றைப் பரிமாணத்தை மட்டும். க.நா.சு. சொல்லு கிறார்.

மனச்சிதைவுக்கு உள்ளான தன் இளம் நண்பர் தியாகுவுக்கு அஞ்சலி என்ற முறையில் தியாகுவின் வாழ்க்கை **பித்தப்பூ** நாவலில் இடம் பெறுகிறது. மனநோய்க்கு ஆட்படும் ஒருவரை குடும்பச் சூழலில் வைத்து மட்டும் விளக்க இயலாது. சமூகச்சூழல் ஆய்வு முக்கியம். தவிர மனநோய் பற்றி ஃபிராய்டு தொடங்கி இன்று வரை பலரது ஆய்வுகள் பற்றிய புரிதல் முக்கியம். அநேகமாக இவை பற்றிய அறிவோடு ‘பித்தப்பூ’ எழுதப்படவில்லை.

திருவள்ளுவரையும் தாமஸ் முனிவரையும் **தாமஸ் வந்தார்** நாவலில் சந்திக்க வைக்கிறார். வரலாற்றுச் சூழல் இந்நாவலில் இல்லை. திருவள்ளுவரை தூக்க லாகவே சித்திரிக்கிறார். முன்னர் தீர்மானிக்கப்பட்ட முடிவை நோக்கி தாமஸ் முனிவர் சென்று கொண் டிருக்கிறார். பார்ப்பன சமூகம் பற்றி க.நா.சு.வின் விரிவான விமரிசனத்தை நாவலில் காணலாம்.

இங்கு குறிப்பிட்ட மூன்று நாவல்களை விடவும் **அவதூதர்** நாவல் சிறப்பானது. 'அவதூதர்', ஆடை யின்றித் திரிபவர். சேற்றில் குளித்து சந்தனமாக மணப்பவர். காலத்தில் முன்னும் பின்னும் சென்று, எதிரிலுள்ள மனிதனைப் பற்றி உண்மை சொல்பவர். கடைக்குள் நுழைந்து, கல்லாவிலிருந்து பணத்தை எடுத்து தெருவில் எறிபவர். 'நிர்வாணத்தோடு நீங்கள் திரிகிறீர்கள்' என்று காவல்துறை அதிகாரி குற்றம் சாட்டினால், 'உனது நிர்வாணம் உனக்கு ஏன் தெரிய வில்லை?' என்று திருப்பிக் கேட்பவர். தாமஸ் முனி வரும் ஒரு அவதூதர் அல்லது சித்தர்.

தி. ஜானகிராமனின் 'நளபாகம்' நாவலில் வரும் காமேசுவரன், அசோகமித்திரனின் 'மானசரோவர்' நாவலில் வரும் ஒரு சித்தர் ஆகியவர்களையும் ஒரு சேரப் பார்க்கும் பொழுது, எண்பதுகளில் சற்று தூக்க லாகத் தெரியும் ஒரு போக்கை நாம் காணலாம்.

நவீன அறிவியலும் தொழில் நுட்பமும் உலக அளவில் நாகரிகத்தில் கடும் நெருக்கடியைத் தோற்று வித்துள்ளன. அறிவின் முற்றான, கறாரான பிம்பத் திற்குள் மனிதனை அடைக்க முடியாது. அறிவின் அதிகாரத்திற்கு மனிதனை உட்படுத்தும் பொழுது, அவன் ஆழ்மனத்தில் புகுந்துள்ள இன்னொரு மனிதன், அறிவின் அதிகாரத்தை உடைத்து முன்னே வருகிறான். இந்த ஆதிமனிதன் முனிவன்,

சித்தன். கூடிய வரை யதார்த்த நெறியில் இயங்க வேண்டியது நாவல் கலை. சித்தர்கள் நாவலுக்குள் வரலாம். ஆனால் வாசகர்களின் நம்பகத் தன்மையைப் பெறும் வகையில் சித்தரிப்பு அமையுமானால், நாவல் என்ற கலை சிறக்கும். 'அவதூதர்' 'தாமஸ் வந்தார்' 'நளபாகம்' ஆகிய நாவல்கள், நம்பகத் தன்மை கொண்டிருக்கவில்லை.

## லா.ச.ரா. 2

லா.ச.ரா. வின் **கல் சிரிக்கிறது, பிராயச்சித்தம்** ஆகிய இரண்டு நாவல்களும் ஒரு நாவலின் இரு பாகங்கள் என்று சொல்லத்தக்கவை. ஒரு திறமான மர்மக் கதைபோல வாசகர்களின் ரசனையை ஈர்த்துச் செல்லும் இந்த நாவல் இதனால் கலைத்தரத்தில் குறையவில்லை.

தன் விருப்பத்திற்கு எதிராக தன் மனைவியும் மகளும், பொருளியல் சார்ந்த ஆடம்பரமான கலைத் துறை வாழ்வுக்குள் ஏன் சென்றார்கள் என்பதற்கான காரணம் தெரியாமல் கலங்கி, அம்பாளின் சேவைக்கென திரும்பி வருகிறான் தர்மராசன். இன்னொருத்திக்கு உதவி செய்ய விரும்பி செயல்படும் போது, தான் விரும்பாத பொழுதும், ஒருவர் சாவுக்கு இவன் காரணமாக நேர்கிறது. தர்மராசனை இயக்குவது எது? தர்மராசன் நல்லவனா, கெட்டவனா? இவற்றின் இயக்கத்தில் தர்மராசன் தவிக்கிறான். அறமா, மறமா? கலங்குகிறான். இந்த உணர்வு நிலையை வாசகனுக்குள் லா.ச.ரா. முழு அளவில் செலுத்துவதில் நாவல் வெற்றி பெறுகிறது.

டால்ஸ்டாயின் **புத்துயிர்ப்பு** நாவல், மனிதன் தான் செய்த தவற்றுக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்கிற

அற உணர்வு பற்றிப் பேசுகிற உயர்தரமான நாவல். டால்ஸ்டாயைப் படித்த ஒருவருக்குத்தான் நமது சமூகச்சூழலில் இந்த உணர்வு ஏற்படும் என்பதில்லை. அறநெறி பற்றிய இந்த அழுத்தமான பார்வை, இந்தியாவின் ஆன்மிக மாபு—ஆழமான கலாச்சார வேர்கள் என்பதன் தொடர்ச்சியில் வைத்துக் காண வேண்டியதாகும். நாவல் என்ற புதிய ஆக்கம், தொன் மரபுகளிலிருந்து தன்னைக் கட்டறுத்துக் கொள்ள வேண்டியதில்லை. இந்தப் பார்வையில் மீண்டும் 'அவதாதர்' போன்ற நாவல்களை மதிப்பிடலாம். லா.ச.ரா. கலை உணர்விலும் அறிவாக்கத்திலும் வற்றி விடவில்லை.

'கோளத்தில் எங்கோ' என்ற நாவல், தலைமுறை இடைவெளி பற்றிய நாவல். இதன் ஒற்றைப் பரிமாணம் வாசகனுக்குள் உறுத்துகிறது.

## ஜெயகாந்தன் 3

இராசராசன் படைப்பிலக்கிய பரிசு பெற்றது ஜெயகாந்தனின் **சுந்தரகாண்டம்.** ஜெயகாந்தனின் பெண்ணியப் பார்வையில் ஒருதலைச் சார்பான தீவிரம் இந்த நாவலின் கட்டமைப்புக்கு காரணமாக இருக்கிறது.

முன்னுரையில் நம் சமூகத்து ஆடவர்கள் அனைவரையும் இராவணர்கள் என்று குறிப்பிட்ட போதிலும், சுந்தரசர்மாவோ, சுகுமாரனோ இராவணர்களாகத் தெரியவில்லை. உடைமை, அதிகாரம் என்ற அரக்கத்தனத்திற்கு உள்ளாகி, சிதைந்த சில வக்கரிப்புகளையே இவர்கள் தமக்குள் கொண்டிருக்கிறார்கள். சமூகத்தின் பீடங்களிலிருந்து செலுத்தப்படும் அரக்கத் தனத்தை எதிர்த்து அழிக்க இயலாமல் இராமனும் அனுமனும் நல்லவர்களாக சமூகத்தின் ஒதுக்குப்புறங்களில் மக்களுக்குச் சேவை செய்யும் மருத்துவர்களாகவும் பத்திரிகையாளர்

களாகவும் வாழ்கின்றனர். தந்தையால் விலைக்கு விற்கப்பட்ட சீதா, தன்னை அடிமைப்படுத்தும் உடன் படிக்கைப் பத்திரத்தைக் கிழித்தெறியத் திறனற்றவளாக வாழ்கிறாள். மரியம் தாழ்த்தப்பட்ட சாதிப் பெண். இவளுக்குள் சோசலிச உணர்வு இயல்பாய் பொருந்து கிறது. சீதாவின் தோழி, சுதந்திரத்தைக் கொஞ்சம் அனுபவிக்கிறாள்.

தொன்மையான இராமாயணத்துப் பாத்திரங்களை நம் காலச்சூழலில் மறு உருவாக்கம் செய்யும் கலை இயக்கத்தில் அரைகுறைப் பயணத்தை ஜெயகாந்தன் இந்த நாவலில் செய்திருக்கிறார். கலை இதனினும் வீரியமிக்கது. ஜெயகாந்தனின் பெண்கள், விடுதலைக்கு வழியின்றி அடைப்பட்டுக் கிடக்கிறார்கள். இடைப் பட்ட நிலையில் ஆணோடு நட்பு போதும்; பாலுறவு தேவையில்லை; பத்திரிக்கைத் தொழில் போதும் என்று தீவிரம் கொள்கிறார்கள். இத்தகைய பெண்கள் மீண்டும் மீண்டும் சுற்றி வருவது உடைமையாலும் அதிகாரத் தாலும் உருவாக்கப்பட்ட வளையங்களில்தான்.

## சுந்தரராமசாமி 4

எண்பதுகளில் கலைஞனை மையமாகக் கொண்டு சில நாவல்கள் எழுதப்பட்டுள்ளன. சுந்தரராமசாமியின் **ஜே. ஜே. சில குறிப்புகள்** விட்டல்ராவின் **காலவெளி** நீலபத்மநாபனின் **தேரோடும் வீதி** ஆகிய நாவல்கள் இத்தகையவை.

அறுபது, எழுபதுகளில் முற்போக்குவாதிகள் கலை ஞனின் படைப்பியக்கத்தை அரசியலுக்கும், ஒற்றைப் பரிமாண அளவிலான சமூக மாற்றக் கண்ணோட்டத் திற்கும் குறைத்தனர். ஒரு தீவிரமான கலைஞனின் பார்வை என்பது, அவன் ஈடுபட்டிருக்கும் கலைத்துறை

யின் உத்திகள் சார்ந்தவையல்ல. அவனுக்குள் இயங்கு வது, வாழ்வியல் பற்றிய தீவிரமான பார்வை. மனிதனைக் குறுக்கும் எந்தப் பார்வையும் தீவிரமான கலைஞனுக்கு உடன்பாடாக இருக்க இயலாது. வாழ்க்கையைப் பல தளங்களில் விரித்துச் செல்வதும், தனக்குள் செரித்துக் கொள்வதும், கலைஞனின் பார்வையில் சில அம்சங்கள்.

முல்லைக் கல்நாயர், வாழ்க்கையை கட்சிக்கும், அரசியலுக்கும் பொருளாதார வாதத்திற்கும் ஆழ்ந்து பார்க்கும் பொழுது பொய்மைக்கும் அடிமைப்படுத்து கிறான். மார்க்சிய அரசியல் இப்படி அறுபதுகளிலும் எழுபதுகளிலும் மனிதனைக் குறைத்தது. இப்போக்குக்கு எதிராக இயங்குபவன் ஜே. ஜே. இவர்களுக்கிடையில் உள்ள முரண்பாடு நாவலில் முன்னணிக்கு வந்தாலும், நுணுகிப் பார்க்கும் பொழுது மேலும் பல முரண்கள் இந்த நாவலின் பல தளங்களில் செயல்படுவதை நாம் அறிய முடியும்.

தமிழகச் சூழலில் கல்கி முதற்கொண்டு இலக்கியத் தையும் வாழ்க்கையையும் கனவியல் போக்குக்கு உட்படுத் தினர். இவர்கள் எழுதிய கவர்ச்சிகரமான மாயத்திரைகள், மனிதனுக்குள் ஆழத்தில் இயங்கும் கனல்களை மறைத் தன. புதுக்கவிதைக்காரர்களும் இந்தப் போக்கை கடைப் பிடித்தனர். இப்போக்குக்கு எதிர்நிலை மேற்கொள்ளு கிறான் ஜே. ஜே. நாவலில் சம்பத், பேராசிரியர் அச்சுதன் போன்றவர்கள் சமூகத்தின் உயரிய சிந்தனைத் தளங் களில் இயங்குகின்றனர். கலை ஏன் இந்தத் தளங்களை எட்ட முடியவில்லை. அச்சுதன் போன்றவர்களிடமிருந்து வெளிப்படும் ஒளியை கலைஞன் தனக்குள் உறுதியாகப் பற்றிக் கொண்டு அமைதி தேட இயலவில்லை. இன் னொரு புறம், குடும்பத்திற்குள் மனைவியின் வழியாக இறுகி, உக்கிரத்தோடு தன்னை வந்து தாக்கும் அதி காரம், இதற்கு ஜே. ஜே. எதிர்நிற்க முடிவதில்லை. கலையின் இயக்கத்திற்குள் தன்னை மூழ்கடித்துக்

கொள்ள ஜே. ஜே. விரும்புகிறான். இறுதியில் 'தற்கொலை'யைத் தேர்ந்து கொள்கிறான்.

சிக்கலான சமூகச் சூழல் இப்படித்தான் ஒரு கலைஞனைத் தாக்க வேண்டுமென்பதில்லை. முல்லைக்கல், அரசியல் முதலியவற்றை வறட்டுவாதமாக்கியவன். மார்க்சியத்துக்குள்ளிருந்து இதற்கு எதிரான போக்கையும் காணமுடியும்.

ஜே. ஜே.வுக்குள்ளும் கூட கனவியல் போக்கை நாம் காண இயலும். ஒரு கலைஞனாக வாழ்வதை தேர்ந்தெடுத்துக் கொள்வதை வாழ்வின் நியதியாகக் கொள்ள இயலாது. எந்த சமூகத்திலும் சம்பத் போன்ற ஒரு சிலர், சமூகத்தின் உயர் தளங்களில் வாழ முடியும். சமூக நெருக்கடிகளால் பாதிக்கப்பட்ட நிலையில், வாழ்க்கை பலருக்கு சிதைவடையத்தான் செய்யும். ஜே. ஜே. ஒரு சமூக நெருக்கடிக்குள் தானே விரும்பிக்கூட மாட்டிக் கொள்கிறான்; அவதிப்படுகிறான். இத்தகைய மனிதர்களை நாம் மதிக்க முடியும். ஜே. ஜே. வையும் நாம் மதிக்கத்தான் செய்கிறோம். நமக்குள்ளும் ஒரு ஜே. ஜே. வை நாம் காண முடியும். வாழ்வின் அனைத்துப் பரிமாணங்களையும் உட்கொண்டதாக ஒருவர் வாழ இயலாது.

## இந்திரா பார்த்தசாரதி 5

பல வண்ண இழைகளால் செறிவாகப் பின்னப்பட்ட அழகிய நாவல் இந்திராபார்த்தசாரதியின் **ஏசுவின் தோழர்கள்.**

போலந்து சமூகத்தில் கத்தோலிக்க மதமும் கம்யூனிசமும் கைகோத்துச் செல்கின்றன. போலந்து மக்கள் ஏசுவின் தோழர்கள். சாலிடாரிட்டி இயக்கத்தை அடக்குவதற்கென ஏற்படுத்தப்பட்ட இராணுவத்தின் கீழ், கூடிய வரை 'அமைதியான' ஆட்சி நிலவுகிறது. அரசு ஆதரவு

இலக்கியங்கள் கழிப்பறைகளில் சுத்திகரிப்புக்குப் பயன் படுத்தப்படுகின்றன. மக்களின் எதிர்ப்புணர்வை திருச் சபையும் இலக்கியங்களும் விடாப்பிடியாக வளர்க் கின்றன.

நம் சமூகத்தில் காணும் எல்லாவகையான ஊழல்களும் போலந்தில் மறைவாகவும் வெளிப்படையாகவும் நடை பெறுகின்றன. கம்யூனிஸ்ட் கட்சியும் அரசும் ஏற்படுத்திய கெடுபிடிப்போர், குடும்பத்தினுள் கேலிச் சித்திரங்களைத் தோற்றுவிக்கிறது. ஆழ்ந்து பார்க்கும் பொழுது இந்திரா பார்த்தசாரதியின் ஆழ்ந்த பார்வையின் வழியே வாழ்வின் முரண்களும் புதிர்களும் வெளித் தெரிகின்றன.

இந்தியத் தூதர் நேர்மையான மனிதர். தனக்கேற் பட்ட புற்றுநோயை மனக்கலவரமில்லாமல் அவர் ஏற்றுக் கொள்கிறார். திருமலை நரசிம்ம தாத்தாச்சாரி (டி.என்.டி.) ஒரு மேதை. தமிழகத்து கிராமத்தில் பிறந்த அவர், போலந்தில் தன் அரிய ஆற்றல்களை மறைத்து ஒரு புதிரென வாழ்கிறார். மனைவியைப் பறிகொடுத்த இவர், இந்தியாவுக்குத் திரும்பவில்லை. இவர் மகள் ஆஷா இந்தியாவை வெறுக்கிறவள். அதே சமயம், நூலகத்தில் கிடைக்கும் இந்தியா பற்றிய அனைத்து நூல்களையும் படித்தவள். இவர்களுக்குள் இயங்கும் வாழ்வின் முரண் அல்லது புதிர் என்ன?

இந்திரா பார்த்தசாரதி மர்மக்கதை சொல்லவில்லை. வாழ்வின் மர்மங்களை அவருக்கு உரிய கூர்மையான மொழியில் கலைத் தேர்ச்சியுடன் வெளிப்படுத்துகிறார். இவர்கள் காயம் பட்ட மனிதர்கள். ஆறாத புண் இவர் களுடையது. நரேன் பயணத்தின் போது கார் வெடித்துச் சாகிறான். தனிமனிதனுக்குள் வாழ்வின் அர்த்தம் தேடும் இருத்தலியலும், சமூக வாழ்வின் அர்த்தம் சொல்லும் மார்க்சியமும் இ. பா.வுக்குள் இணைந்திருக்கின்றன. ஒரு புள்ளியில் திடீரென விதிவாதம் வெடிக்கிறது.

வறிய நிலையிலும் அன்பில் குறையாதவள் கோமளம் அத்தை. அவள் வயிற்றுத் தீ தணிப்பதற்காக தன் உடம்பை விற்கிறவள் அவள் மகள். வாசகர்களின் அறிவையும் கலை உணர்வையும் உச்ச அளவில் கோருவது இந்த நாவல்.

ஓர் அபத்த நாடகம் போல இந்த நாவல் இயங்குகிறது. அரசு, கட்சி ஆகியவற்றின் அடக்குமுறையால் வாழ்வின் அர்த்தங்கள் அழிகிற சூழலில், யதார்த்த உலகின் வெம்மையிலிருந்து தப்ப கனவுலகில் வாழும் நிலை மனிதனுக்கு நேர்வதை தூர்ஸ்கி என்ற கலைஞர் மூலம் இ.பா. அற்புதமாகச் சித்தரிக்கிறார். தூர்ஸ்கி வண்ணத்துப் பூச்சியோடு வாழ்கிறார். நூற்றுக் கணக்கில் பெரிய சிறிய வண்ணத்துப் பூச்சிகளை வரைகிறார். இவர் ஒருவரா? இருவரா? தெரிவதில்லை. யதார்த்தத்துக்கும் கனவுக்கும் இடைப்பட்ட பிரதேசத்தில் வாழ்வதை இவர் தேர்ந்து கொண்டவர்.

நாவல், போலந்தின் வாழ்வுச் சூழலில் இருந்து இந்தியச் சூழல் வேறுபடவில்லை என்பதைத் தெரிவிக்கிறது. வரலாற்றுக்கும் தத்துவங்களுக்கும் வாழ்வுக்கும் இடையிலான அர்த்தங்களைத் தேடும் முயற்சி என்ற முறையில் ஓர் அரிய நாவல் இது. இதே தரத்தில், ஆனால் சற்று சிறிய அளவில், இயங்கும் இ. பா. வின் இன்னொரு நாவல், தவந்து தணிந்த காடுகள்.

## அசோகமித்திரன் 6

எண்பதுகளில் வெளிவந்த அசோகமித்திரனின் **ஆகாயத் தாமரை, மானசரோவர், ஒற்றன்** ஆகிய மூன்று நாவல்களும் நம்மைப் பெரிதும் கவர்பவை.

கதைத் திரட்சி என்பது நாவலுக்குத் தேவையில்லை. நம்மோடு நாளும் பழகும் சில எளிய மனிதர்களின் அபூர்வ

மான சில அம்சங்களை வைத்து நாவல் செய்ய முடியும். எளிய மனிதர்கள் என்று நாம் நினைக்கும் பலர், ஆழ்ந்து பார்க்கும் பொழுது அபூர்வமான குணங்களைக் கொண்டிருக்கக்கூடும். நாவல் படிப்பது நம்மைச் சுற்றி வாழும் மனிதர்களைப் படித்துக் கொள்வதற்கான பயிற்சி. சில சொற்களில் அழகிய சித்தரிப்புகள், நயமான கேலி, யாரையும் இகழாத குணம்—இவை அசோகமித்திரன் எழுத்தின் சில நல்ல குணங்கள்.

'ஆகாயத்தாமரை'யில் வரும் ராஜப்பா, ஒரு மாபெரும் நிறுவனத்தின் தலைவர். கம்ப்யூட்டர் மாதிரி கணக்கு வழக்குகளில் சிக்கிய அவர் மூளை, விடுதலையை எதிர்பார்த்து காத்துக் கிடக்கிறது. கொஞ்சம் மது அருந்த வேண்டும். அப்புறம் முட்டாள் மாதிரி யாருடனாவது அரட்டை அடிக்க வேண்டும். பொய்யாய்க் கோபிக்க வேண்டும். அடுத்தவர் தன்னைச் செய்யும் கேலியை இரசிக்க வேண்டும். இரகுநாதனைக் கோபிக்கிறார். மாலதியின் கேலியை இரசிக்கிறார்.

பெரிய நிறுவனங்கள், மனிதனை எப்படி இயந்திரமாக்கி விடுகின்றன? இதற்குள் அகப்பட்டு மனிதன் எப்படி திணறுகிறான்? இதற்கான சித்தரிப்பு, ராஜப்பா-ரகுநாதனுக்கும் மாலதிக்கும் இடையில் தமிழ்க் கதைகள் படித்துப் பழகிய வாசகர் எதிர்பார்ப்பது, காதல். அசோகமித்திரன் சித்தரிப்பில் நாம் இரசிப்பது நட்பு. தமிழக் கதைகளில் இப்படியொரு மாற்றம் அண்மைக் காலத்தில் ஏற்பட்டு வருகிறது.

பெரிதாக இந்நாவலில் கதை இல்லை. மனிதர்கள், சில நிகழ்ச்சிகள் மட்டும். கதையைத் தவிர, வேறு அம்சங்கள்தான் இந்த நாவலை அழகுபடுத்துபவை.

'மானசரோவர்' நாவலில் இந்தி நடிகன் சத்தியன் குமார், கோபால் என்ற நண்பனுக்குள் தன் குருவின்

சாயலைக் கண்டு, அவனோடு ஆழ்ந்த நட்புக் கொள் கிறான். கோபாலின் மனைவி வெறிபிடித்து, தன் மகனைக் கொல்வதற்கு சத்தியன்குமாரும் காரணமாகிறான். ஒரு நொடியில் எல்லாவற்றையும் உதறிக்கொண்ட கோபால், தன் குருவாகிய சித்தரைத் தேடிப் புறப்பட்டு, ஒரு கிராமத்தில் கண்டுபிடிக்கிறான். சத்தியன் குமாரும் அங்கு வந்து சேருகிறான்.

சித்தர் தான் மானசரோவர். அவரைத் தேடிக் கண்ட வர்க்கு வாழ்க்கைப் பயணத்தில் பாவங்கள் தொலையும். வாழ்க்கையின் எளிமையும் புனிதமும் சித்தர் வாழும் சூழலில் கிடைக்கின்றன. சோதனைகளின் வழியே மனிதன் மானசரோவரைப் பெறுகிறான். மானசரோவர் ஒரு பெருமையோ, அலங்காரமோ, மையமோ, சேர்க் கையோ அல்ல. மானசரோவர் ஒரு விடுதலை. காலருகில் பூத்த நெருஞ்சி. நம் எதிர்முகத்தில் பேசும் சிட்டுக்குருவி, பற்றியதை நெகிழவிடல், தமிழில் மிக வித்தியாசமான ஒரு சாதனை.

'ஒற்றன்' நாவல், அமெரிக்காவில் அயோவா பல்கலைக்கழகத்தில் பலநாட்டு எழுத்தாளர்களோடு அசோகமித்திரன் பழகிய அனுபவத்தைச் சித்திரிக்கும் ஓர் அபூர்வமான நாவல். பயண நூல் போல் தோற்றம் தருகிற ஆனால் நேர்த்தியான நாவல். இந்த நாவலில் கதைத் தொடர்ச்சி இல்லை. அங்கங்கே மனிதர்கள்.

அமெரிக்கா என்ற செல்வமும் நாகரிகமும் பெருத்த நாட்டுச் சூழலில், நாகரிகத்திலும் செல்வத்திலும் தாழ்ந்த நாட்டைச் சேர்ந்த எழுத்தாளர்கள் சில மாதங்கள் வாழ நேர்ந்த போது, தம்மை எப்படி கேலிச்சித்திரங்களாக ஆக்கிக் கொள்கிறார்கள் என்பதைக் கிண்டல் தொனி இல்லாமல், மனிதத் தன்மையோடு, இந்த நாவல் சித்தரிக் கிறது. இந்நுணம், அசோகமித்திரனின் குணம்.

இலாரியா என்ற மாணவி எப்பொழுதும் புலம்பலோடு தன் காதல் கதைசொல்வதை அனுதாபத்தோடு அ. மி. (டகரஜான், தியாகராஜன்) கேட்கிறார். எத்தியோப்பிய எழுத்தாளன் அபேதுபெக்னா அழுக்குமூட்டை. முட்டை இறைச்சி, தக்காளி ஆகியவற்றை பெருமளவு விலை கொடுத்து வாங்கி, அறைக்குக் கொண்டு வந்து நாற அடிக்கிறான். பெருநாட்டு எழுத்தாளன் பிராவோ தற்பெருமைக்காரன். கட்டங்களோடு கூடிய வரைபடத்தில் கணிதச் சூத்திரங்கள் மாதிரி இலக்கியம் தயாரிக்க முனைந்து தோல்வியடைகிறான். எல்லார்க்கும் பரிவோடு உதவி செய்யும் இந்தியன், அசோகமித்திரன் அல்லது கதை சொல்லும் நபர்.

மனிதர்கள் எந்நிலையிலும் ரசனைக்குரியவர். மனிதர்களைப் பிறரோடு ஒப்பிடாமல், உயர்வு தாழ்வு சொல்லாமல், கோபம் வெறுப்பு கொள்ளாமல், பார்த்து, கேட்டு பழகி, உதவி செய்வதன் மூலம் அவர்கள் மனந்திறந்து நம்மோடு பழக - இப்படி மனித இரசனை வளர்க்கிற நாவல் இது.

## சா. கந்தசாமி 7

அறுபதுகளில் சா. கந்தசாமி பார்த்த உலகம் எண்பதுகளில் முற்றாக மாறியிருக்கிறது. அன்று சிதம்பரம் (சாயாவனம்) காட்டை அழித்தான். தொழிற்சாலை உருவாக்கினான். சமூகத்திலும் கதைகளிலும் அவன் அன்று தலைவன், இன்றைய கதைகளில் இவன் தலைவனாக இல்லை. இன்றைய சமூகத்தில் இவன் அதிகாரி. சமூகத்தை அழிப்பவன். இன்றைய மனிதன் வாழ்வுக்கிடையில் அதிகாரத்தால் அடித்து நொறுக்கப்பட்டு துண்டுகளாகச் சிதறியவன். இந்த மனிதனைப் பற்றித்தான் எண்பதுகளில் சா. கந்த

சாமி எழுதுகிறார். அவன் ஆனது, சூரியவம்சம், தொலைந்து போனவர்கள் ஆகிய இவரது மூன்று நாவல் களிலும் இடம் பெறுபவர்கள் துண்டு துக்காணிகளாய் சிதறிய மனிதர்.

இந்த மூன்று நாவல்களிலும் வரும் மனிதர்கள் பற்றி யும், அவர்கள் வாழ்க்கை பற்றியும் இவ்வாறு தொகுத்துக் கொள்ளலாம். இவர்கள் தம் இளமைக் காலத்தை கிராமங் களில், இயற்கையின் மத்தியில், அன்பான உறவு களோடு கழித்தவர்கள். கிடைத்த ஏதாவதொரு வேலை —சைக்கிள் பழுது பார்ப்பது, சாராயம் விற்பது— செய்து வயிற்றைக் கழுவிக் கொள்ள வேண்டும். அம்மா தன் மகள் திருமணத்திற்காக, சடங்குகளுக் காகப் பையனை வதைப்பாள். ஊரை விட்டு ஓடி அவன் நகரத்தில் புகுவான். அங்குமிங்கும் சில வேலை கள். பேட்டை ரவுடிகளிடம் அடைக்கலம் புகவும் நேரலாம். உடல் உணர்வு உந்த, இவன் காதல் செய்வான். அடித்துத் துரத்தப்படுவான்.

இளமைக்காலத்து நண்பனையோ உறவையோ தேடிச் சென்றால், அவன் இவனைக் கண்டுகொள்ள மாட்டான். கண்டு கொண்டாலும் தம் வீட்டுக்கு அழைக்கமாட்டான். இவன் விரும்பி இல்லற வாழ்க்கையில் ஈடுபட முடியாது. ஒருத்தன் மனைவியை இன்னொருத்தன் அபகரித்துக் கொள்ள வேண்டும். தன் கணவனிடம் அடிபட்டு மிதி பட்ட மனைவி, இப்படி இன்னொருவனால் அபகரிக்கப்படக் காத்துக் கிடக்கிறாள்.

ஊமைப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்ட தால் ஒருவன் தொழில் அதிபர் ஆகிறான். மனைவியின் ஓயாத தூண்டலால் இன்னொருவன் தன் சோம்பலை உதறிக் கொள்கிறான். இளமையில் கணிதத்தில் தேர்ந் திருந்தவன் இப்பொழுது சூதாட்டத்தில் மூழ்கிவிடுகிறான். குடி இல்லாமல் வாழ்க்கையைச் சகித்துக் கொள்ள முடிவ

தில்லை. தான் இழுத்துக்கொண்டு வந்த மனைவியின் மகன், இவனை அடிக்கிறான். இரண்டொருவர் படிப்பறிவில் பழகிக்கொண்டவர். படிப்பில் மூழ்கடித்துக் கொள்ள வேண்டும். எதற்காகப் படிக்கவேண்டும் என்ற சிந்தனை இருக்கக் கூடாது.

சிலருக்கு தொழிற்சங்கப் பழக்கம். தலைவன் இவனுக்கு சூரியன். சூரிய வம்சத்தில் தான் ஒருவனென்ற மிதப்பு. இவனுக்கும் ஒரு பெருமைக்குள் தன்னை மறைத்துக் கொள்ள வேண்டும். மனிதர் தம்மைத் தொலைத்துக் கொண்டவர். தம்மை இனிதேடி அவர்களால் கண்டு பிடிக்க முடியாது.

சிலருக்கு நல்ல பேச்சுத்திறமை. பிழைத்துக்கொள்ள முடியும். சிலருக்குப் பேசத் தெரியாது. யாருக்காவது - மனைவிக்கும் கூட கைப்பாவை ஆக வேண்டும்.

இந்த மனிதர்களுக்கு எதிர்காலம் இல்லை. அனேகமாக நிகழ்காலமும் இல்லை. இவர்களிடம் கனவுகள் உண்டா? இருக்க முடியாது. புலன்கள் உண்டு. கொஞ்சம் தீனிபோட வேண்டும். அசட்டுத்தைரியம் உண்டு. பிறரை அடித்துப் போடலாம்.

இத்தகைய மனிதர்களின் கதைகளை சா. கந்தசாமி தன் நாவல்களில் சொல்கிறார். ஒவ்வொருவர்க்கும் ஒரு வகை பேச்சுமுறை உண்டு. சிலர் மௌனத்தின் வழியே பேசமுடியும். ஒவ்வொரு மனிதருக்கு ஒவ்வொரு வகை இயல்பு. ஒருவர் மாதிரி இன்னொருவர் இல்லை. ஒவ்வொருவரின் பேச்சு முறை மூலம், அவரின் இயல்பின் மூலம், அவர்களின் கதை சொல்லும் கலையில் சா. கந்தசாமி தேர்ந்தவர். இவருக்கு இன்னும் தொழிற்சங்கத்தின் மீது நம்பிக்கை இருக்கிறது. தொழிற்சங்கத் தலைவன், இவருக்கு கதைத்தலைவன். இந்த மாயையி

லிருந்து சா. கந்தசாமி விடுபடவேண்டும். இம்மாதிரி மனிதர்களை, அவர்களின் இளமையிலிருந்தும் இயற்கைச் சூழலிலிருந்தும் வாழ்க்கையிலிருந்தும் துண்டித்து அவர்களைத் துண்டுகளாக நொறுக்கியவர் யார்? என்ற பார்வை சா. கந்தசாமிக்கு உண்டா, இல்லையா தெரியவில்லை. எனினும் நம் காலத்து நொறுங்கிய மனிதர்களைப் பற்றி நுட்பமாகச் சொல்லுகிறார் சா. கந்தசாமி - தமிழ்நாவலுக்கு இது முற்றிலும் புதியகுரல். என் உத்திகளைத் கவனி என்று சொல்லாமல் இயல்பாக கலைத்திறன் வெளியே தெரியாமல் கதை சொல்கிறார். இயல் நெறி என்று இதனைச் சிலர் ஒதுக்கலாம். நம் காலத்து நொறுங்கிய மனிதர்களை வேறு எப்படிச் சொல்வது? வெறுப்பிலும் கோபத்திலும் உடல் இச்சைக்காகவும் மனிதர்கள் அடித்துக்கொண்டாலும், மற்றவரை அலைக்கழித்தாலும், இவர்களுக்குள்ளும் அன்புக்கான தேட்டம் இருக்கத்தான் செய்கிறது. இந்த அம்சத்தில் இவர்கள் இன்னும் மனிதர்களாக இருப்பதை சா. கந்தசாமி கண்டு சொல்லுகிறார்.

## நீல. பத்பநாபன் 8

நீல. பத்மநாபனின் **தேரோடும் வீதி** கடந்த முப்பதாண்டுகளுக்குள் தமிழ் எழுத்தாளர்கள், புத்தக வெளியீட்டாளர்கள், பரிசுக்குழுவினர், இலக்கிய நிறுவனத்தினர்—ஒரு சிலரைத் தவிர—எவ்வளவு கேவலமாக செயல்பட்டவர் என்பதை நுட்பமான நூற்றுக்கணக்கான விவரங்களோடு சொல்கிறது.

நாவலில் கதை சொல்லும் கதிரேசன், நீல பத்மநாபன் தான் என்பதை யாரும் கண்டு கொள்ள முடியும். ஒவ்வொரு எழுத்தாளரையும் அனேகமாக அலங்கோலப்

படுத்தும் முறையில் அவர்களுக்கு ஆசிரியர் புனைபெயர் வழங்கியுள்ளார். ஆசிரியருக்கு உதவி செய்த சிலரை, வெகுவாகப் பாராட்டுகிறார். தனக்குச் சேரவேண்டிய பெருமைகள், வாய்ப்புகள் பலவற்றை தனக்குக் கிடைக்காமல் தடுத்தவரைக் காய்கிறார். இவற்றால் பாதிக்கப்பட்டு, ஆத்மவிசாரணை செய்து, தன் வேதனை களைக் கடவுளுக்கு முன்பும், நமக்கு முன்பும் கொட்டு கிறார். ஒரு இலக்கியவாதி என்ற முறையில் தன் படைப்புக்கான முன் அனுபவங்கள், அனுபவங்களைத் தனக்குள் செரித்துக் கொண்ட பார்வையின் பரிமாணங் கள், அவற்றை எழுதும் பொழுதே தனக்குள் ஏற்படும் இராசாயண மாற்றங்கள் - இவை பற்றி நாவலில் எது வுமே சொல்லப்படவில்லை.

இலக்கியம் என்பது பழிதீர்த்துக் கொள்வதற்காக இருக்க முடியாது, எழுத முடியாது. நம் வாழ்க்கை அனுபவங்களோடு தொடர்பு கொண்ட பிறரைப் படைப்புக்குள் கொண்டு வரும் போது, சமூக வாழ்வின் விரிந்த களங்களில் வைத்துப் பேச வேண்டும். நம்மை ஒருவர் திட்டினார், கேவலப்படுத்தினார் என்றால் அவருக்குள் இயங்கும் கோபத்தின் வேர்களை இலக்கிய வாதி என்ற முறையில் கண்டறிய வேண்டும். வேர் களைத் தேடிச்சென்றால், அவரது இளமைக்காலத்திற் குள்ளும், குடும்பச் சூழலுக்குள்ளும், அப்புறம் சமூகத் தின் பல தளங்களுக்குள்ளும், இறுதியாக வரலாற்றுக் குள்ளும் செல்வதைக் காணலாம். இந்நிலையில், அவர் கோபம் ஒரு வெளிப்பாடு. உள்ளே கனல்வது வேறு என்பதைக் காண இயலும். நோய்களின் மூலம் இறுதி யில் சமூக, வரலாற்று நிலைமைகளுக்குள் செல்கிறோம். இந்த மனிதர்கள் பரிவுக்குரியவர். இவர்களை இப்படி வைத்து இயக்குவது மாபெரும் சக்திகள். இவர்களின் பங்கு கையளவு. அந்தச் சக்திகளின் பங்கு கடலளவு. ஓர் இலக்கியவாதி, இத்தகைய ஆழ்ந்த பார்வை கொள்வது தேவையான கடமை. தேடல் இல்லாமல்

நானும் இலக்கியம் செய்கிறேன் என்று வந்து விட முடியாது. நீல. பத்மநாபனுக்குள் இத்தகைய ஆழ்ந்த பார்வையோ, தேடலோ இல்லை. ஆகவேதான் இவர் தன் கால படைப்பாளிகள் பலரைக் கேவலப்படுத்துகிறார். நம் கால இலக்கியவாதிகள், வெளியீட்டார்கள் பற்றிய, நாவல் என்ற பெயரில் எழுதப்பட்ட விரிவான ஆவணம் என்று இதனைக் கொள்ள முடியும்.

## ராஜம் கிருஷ்ணன் 9

எழுபதுகளில் தமிழகத்தில் சில வட்டார/சமூக நிலைமைகளை நேரில்கண்டு விவரங்களைத் தொகுத்து, அவற்றின் அடிப்படையில் பல நாவல்களை எழுதிய ராஜம் கிருஷ்ணனை இவரது நாவல்களில் கலைத்திறம் இல்லை என்பதற்காக நாம் புறக்கணித்தோம். எண்பதுகளில் விடாப்பிடியாக இதே செயலை உறுதியோடு தொடர்ந்திருக்கிறார்.

தஞ்சை கிழக்குப் பகுதியில் உழவர் மத்தியில் தோன்றிய கதையை **சேற்றில் மனிதர்கள்** நாவலிலும், தென் தமிழகத்தில் தீப்பெட்டித் தொழிற்சாலையில் சிறுவர் சிறுமியர் படும் துயரங்களை **கூட்டுக்குஞ்சுகள்** நாவலிலும், தூத்துக்குடி வட்டாரத்தில் உப்பளத் தொழிலாளர் வாழ்க்கையை **கரிப்புமணிகள்** நாவலிலும் சித்தரிக்கிறார்.

எழுபதுகளிலேயே பெண் உரிமைக்கான போர்க்குணம் கனல் பெற்றது. எண்பதுகளில் பெண்ணுரிமைக்கான இந்தப் போர்க்குணம் தீவிரப்பட்டு, மேலும் பல நாவல்கள் இவர் மூலம் உருப்பெற்றன. முற்போக்காளர் என்ற பெருமையோடு கட்சிக்காகப் பாடுபடும்

எழுத்தாளர்களிடம் காண இயலாத அளவுக்கு இவரி டம் சமூக அக்கறை உரம் பெற்றுள்ளது. கலைத்தரம் குறைவு என்பதற்காக இவரை ஒதுக்கியதன் தவறு, இப்போது நமக்கு புரிகிறது.

சில நாவல்களில் பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் அடைத்துக் கொண்டிருக்கின்றன. ஒரு சார்பு நிலை எழுத்தாளர் என்ற முறையில், இப்படித்தான் நான் கதையை உருவாக்குவேன் என்ற நோக்கில், கதை உருவாக்கத்தில் செயற்கைத்தன்மை வெளிப்படையாகத் தெரிகிறது. இவற்றையெல்லாம் மீறித்தெரிகிறது இவரது மனிதநேயம். இவரது தமிழ்நடை மெருகேறி உள்ளது. தவிர இவரது கருத்துக்களில் தெளிவு தொடர்ந்து மிகுந்து வருகிறது.

ஒரு காலத்தில் விவசாயிகளின் போராட்டத்தில் தீவிரம் காட்டிய கட்சி, பிறகு தீவிரம் குறைந்து, அரசு அதிகாரத்தோடு ஒத்துச்செல்வதையும், இதற் கெதிராக உழவர்கள் திரண்டு எழுவதையும், அரசு அதிகாரத்தோடு மோதுவதையும் 'சேற்றில் மனிதர்கள்' நாவலில் சித்தரிக்கிறார். இவை எல்லாம் சேர்ந்து, ராஜம் கிருஷ்ணனை தமிழில் முதல் வரிசை எழுத் தாளர்களில் ஒருவராக்கியிருக்கிறது.

பெண்ணுரிமை சார்ந்த பிரச்சினைகளைப் பற்றிய இவரது நாவல்களை இங்கு எடுத்துக்கொள்ளலாம். **மானுடத்தின் மகரந்தங்கள்** நாவலில் விதவைகளின் வாழ்க்கையைச் சித்தரிக்கிறார். பாரதியின் நெறிப் படுத்தலை ஏற்றுக் கொண்டவர் மதுராம்பாள். 35-வது வயதில் தனக்குக் கட்டப்பட்டிருந்த பொட்டுத்தாலியை உடைத்தெறிந்து திருமணம் செய்து கொண்டவர். நோயாளிக் கணவன் இறந்த பிறகு கருணையோடு தன்னைச் சார்ந்தவர்களைப் பேணுகிறார். தன் பேத்தி, பேபி சினிமா அலங்கார ஆசையால் வீட்டை விட்டு

வெளியேறி, நகரத்தில் நாசமாகிறாள். இன்னொரு பேத்தி, ரேகா அமெரிக்காவிலிருந்து வந்த ஹிப்பி இளைஞர்களோடு ஆண், பெண் பேதமின்றி கொட்ட மடிக்கிறாள். இவளிடம் மதுராம்பாளுக்கு வெறுப்பு அணுவளவும் இல்லை. இவர்களைப் புரிந்து கொண்டு பரிவு காட்டுகிறார் மதுராம்பாள்.

மண்ணகத்துப் பூந்துளிர்கள் நாவலில் வரும் அழகாயி தன் கணவன் இருக்க இன்னொருவரிடம் ஆசையோடு படுத்து குழந்தை பெறுகிறாள். அழகாயியை கணவன் வெறுக்கவில்லை.

'புதிய சிறகுகள்' நாவல் அபிராமியின் துயரங்களைச் சித்தரிக்கிறது. இளம் வயதில் பெற்றோர் ஆதரவிலும், திருமணத்திற்குப் பின் கணவன் ஆதரவிலும், கணவனுக்குப் பின் மகன் ஆதரவிலும் ஒரு பெண் இருக்கிறாள். கணவனுக்குப் பின் மகன் சீனி, பல சூழல்களில் குரூரமாக தாயிடமிருந்து பணத்தை முழுமையாகப் பறித்துக்கொண்டு ஓடிவிடுகிறான்.

முற்றிலும் ஆதரவற்று விடுகிறாள் அபிராமி. பெண்ணியம் பற்றி ஆய்வு மேற்கொள்கிறாள் சரயு. கணவனாலும் இதற்காகவே தன் உறவினர்களினாலும் இறுதியில் தன் மகனாலும் சரயு ஒதுக்கப்படுவதை தோட்டக்காரி நாவல் சித்தரிக்கிறது. இந்த நாவலில் வரும் சில்வியா சமூக குரூரங்களால் பாதிக்கப்பட்டவள், ஆனாலும் பிறரிடம் அன்பைப் பொழிபவள். தன் காதலியைக் கைவிட்டவனோடு வாழ்க்கை நடத்த நேர்ந்து அவனாலும் கைவிடப்பட்ட இன்னொரு பெண்ணின் துயரங்களை ஆண்களும் பெண்களும் கதை சொல்கிறது.

பெண்களின் வாழ்வில் பல வகைகளிலும் ஏற்படும் பாதிப்புகளைப் பரிவோடு சித்தரிக்கிறார் ராஜம் கிருஷ்

ணன். பெண்ணுரிமைக்காகப் பாடுபடும் சில தனிநபர்கள், இயக்கங்கள், ஆய்வு நிறுவனங்கள் பற்றி பல நாவல்களிலும் விரிவாகச் சொல்கிறார். துயரப்படும் பெண்கள் தாமே இனி என்ன செய்ய வேண்டும் என, வழிகாட்டி நூல் போல இந்த நாவல்கள் பல விவரங்களைத் தருகின்றன. உரிமைக்காகப் போராடும் பெண்கள் அன்பு, தாய்மை, கருணை ஆகியவற்றை இகழ்ந்துவிடக்கூடாது. வளமான மரபின் தொடர்ச்சியில் வரும் பண்பாடுகளைக் காப்பாற்ற வேண்டும். பெண்ணியத்தில் தீவிரம் காட்டும் சிலரிடம் நாம் காணப் பெறாத, இத்தகைய நல்ல குணங்களை ராஜம்கிருஷ்ணன் தன் நாவல் மாந்தர்களிடம் வெளிப்படுத்துகிறார்.

துயரப்படும் எந்தப் பெண்ணைச் சந்தித்தாலும், அந்தப் பெண்ணின் உண்மைக் கதையை உடனே நாடாவில் பதிவு செய்துகொண்டு, அந்தக் கதையில் அங்குமிங்கும் பாலுணர்வு முதலிய காரம், மணம் கூட்டி கதை எழுதும் குஞ்சரியை ஒரு நாவலில் சித்தரிக்கிறார்.

## பூமணி 10

எண்பதுகளில் பூமணியின் மூன்று நாவல்கள் வெளிவந்தன. **வெக்கை, பிறகு, நைவேத்தியம்** ஆகிய நாவல்கள்.

'வெக்கை' ஒரு குறுநாவல் என்ற அளவில் எழுதப் பட்டுள்ளது. நீண்ட ஒரு நிகழ்ச்சியிலிருந்து ஒரு முக்கியப் பகுதி வெட்டப்பட்டு, அப்பகுதி மிக நுணுக்கமாக 'வெக்கை' நாவலில் சொல்லப்படுகிறது. 'பிறகு' விரிவான நாவல். சுதந்திரத்திற்குப் பிறகு ஒரு கிராமத்தின் வரலாறு சொல்வது போல அமைகிறது.

'நைவேத்தியம்' ஒரு முழுமையாள நாவல் என்று சொல்லத்தக்கது. கதைத் தொடர்ச்சி, குறுக்கும் நெடுக்குமாகச் செல்லும் கதை, பலவகை மனிதர்கள் என்ற முறையில் நாவல் அமைகிறது. அனேகமாக எல்லா மனிதர்களும் பூமணியின் அன்பிலிருந்து வார்த் தெடுக்கப்பட்டவர்கள். 'வார்ப்பு' என்பது தெரியாமல் இயல்பாக நடமாடுபவர்கள். ஓர் அக்கிரகாரம் எவ்வாறு முற்றாகச் சிதைகிறது என்பதைச் சொல்லும் முறையில் வரலாற்று நாவல் வரிசையில் பொருத்தமாகச் சேர்க்கத் தக்கது.

அக்கிரகாரம் என்றாலே அருவருப்பையும் கோபத் தையும் கொட்டி விமர்சனம் செய்வதன் மூலம், மனிதர் களைப் பார்க்க நம்மில் பலர் தவறி இருக்கிறோம். பூமணி முற்போக்குவாதி. பார்ப்பனர்களை இகழ்வதன் மூலம் தன் முற்போக்குப் பார்வையை உறுதி செய்ய விரும்பாதவர் பூமணி. வாதங்களைக் காட்டிலும் மனிதர் மதிக்கத்தக்கவர். பூமணி கலைஞன் என்ற முறையில் தன் கடமையை நிறைவாகச் செய்திருக்கிறார்.

'நைவேத்தியத்தின்' நடை, செறிவுக்கும் நயத்திற் கும் நளினத்திற்கும் இடம் தந்துள்ளது. பெரும்பாலான வாக்கியங்களில் கவிதை துள்ளுகிறது.

தொடர்ந்து மழை இல்லை. அக்கிரகாரத்துக்கு கிடைத்து வந்த நெல் இப்போது கிடைப்பதில்லை. கோயில் கிணற்றில் தண்ணீர் இல்லை. சிவன் கோவில் சங்கரய்யர் எவ்வளவு கேட்டும் மான்யர் மகாதேவய்யர் பணம் தரவில்லை. அக்கிரகாரத்தை விட்டு பலர் வெளி யேறுகின்றனர். நிலங்கள் விற்கப்படுகின்றன. நந்த வனம் அழிக்கப்படுகிறது. தோட்டத்தில் வாழைப்பழம் திருடியதற்காக மகாலிங்கையர் அடிபடுகிறார். பட்டினி கிடந்து சாகிறார். மகாதேவய்யர் சொத்தும் அதிகாரமும்

திமிரும் அதிகரிக்கின்றன. தெருவில் குழந்தைகள் இல்லை. சங்கரய்யர் மனைவி வருந்தி இறக்கிறாள்.

அக்கிரகாரத்துப் பார்ப்பனர் நிலங்களைப் பொறுப்போடு கவனித்தவன் தலையாரி. சங்கரய்யருக்கு மறைவாக உணவும் மருந்தும் கொண்டு வந்து தந்து சீதை காப்பாற்றுகிறாள். சீதை சேரியில் வாழ்பவள். சங்கரய்யருக்கு அன்பு தந்தவள். சீதை கொண்டு வரும் நண்டுச்சாற்றை உண்டு இருமல் குறைந்தவர், சங்கரய்யரும், பிறகு சாம்புவய்யரும்.

அக்கிரகாரம் முழுவதும் சோகம் நிறைகிறது. சங்கரய்யர் இறந்தார். அக்கிரகாரத்தில் வாத்தியார் குடியேறினார். சீட்டாட்டம் நடைபெறுகிறது. பார்ப்பனர் ஹோட்டல் நடத்துகிறார். பார்ப்பனப் பெண்ணை சுருட்டைமுடி வாத்தியார் திருமணம் செய்கிறார். இவர் முற்போக்கு வாதி. பக்குவமாக நாவலுக்குள் வந்தவர்.

உழைப்பாளிகள் நாவலுக்குள் நல்ல மனிதர்கள். மகாதேவய்யரைப் போன்ற நிலச் சொத்தால் கொழுத்தவர்களும் நாவலுக்குள் வருகின்றனர். அய்யரை அடித்த பாதாளை பிறகு மிகவும் வருந்துகிறான். சாம்புவய்யர் வேதம் படித்தவர். உயர்ந்த மனிதர். வறுமை வந்த போது பலருக்கு வேதம் கைகொடுக்கவில்லை. அக்கிரகாரத்திற்கு வெளியிலிருந்த சித்திரக்குடிக்காரர்கள் அக்கிரகாரத்தை உடைமை கொள்வதில் ஆர்வம் கொண்டுள்ளனர். அக்கிரகாரத்திற்குள்ளும் வெளியிலும் வரலாறு நகர்வது தெரிகிறது. அக்கிரகாரத்தைத் தாங்குபவர்கள் யார் என்பது தெரிகிறது. தரமான, முழுமையான நாவல். 'பிறகு' நாவலை விடவும் மனிதக்கலை கூடியிருக்கிற நாவல்.

## நாஞ்சில்நாடன் 11

எண்பதுகளில் 'நாஞ்சில் நாடனின்' இரு நாவல்கள் வெளி வந்துள்ளன. இவருடைய நாஞ்சில் நாட்டு நடையும் வட்டார வர்ணனைகளும் அற்புதமானவை. சமூகத்தில் அடிமட்டத்தில் வாழ்வுக்காக அலையும் தனி மனிதர் மீது கொண்ட பரிவை மையப்படுத்தி நாஞ்சில் நாடன் நாவல் எழுதுகிறார்.

மாமிசப்படைப்பில் வரும் கந்தையா தன் நண்பர்கள் சிலரோடு ஆற்றருகில் சுடுகாட்டுப் பகுதியில் புறம்போக்கு நிலத்தைப் பண்படுத்தி சாகுபடி செய்யும்பொழுது, ஊர்ப் பெரிய மனிதர்களின் கோபத்திற்கு உள்ளாகிறான். பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகளின் சின்னத் தனங்களைத் தட்டிக் கேட்கிறான். முத்தாரம்மன் கோயிலுக்கான வசூல் பற்றி கேள்வி கேட்கிறான். தவிர, இவன் சாதியில் தாழ்ந்தவன். திருவிழா சமயத்தில் வாழைத் தோட்டத்தில் வைத்து இவன் மாமிசப்படைப்பு ஆக்கப்படுகிறான். கிராமத்து அடித்தள மக்களுக்கு, தாழ்த்தப்பட்டவர்களுக்கு வாழ்வதற்கான வழி இன்னும் தொடர்ந்து அழிக்கப் படுவது பற்றிய ஏக்கம் வாசகனுக்குள் நிறைகிறது.

கந்தையா கடுமையான உழைப்பாளி. ஆகவே நேர்மையானவன். நேர்மைக்காக எழுந்து நிற்பவன். கதை நேர்கோட்டில் இயங்குகிறது. முத்தாரம்மன் கோயில் தோன்றிய வரலாறும், முத்தாரம்மனுக்கு விழா தேவை என்று கனவில் கண்டு சொல்லும் வைரவன் கொண்டாடி பற்றிய கதையும், நாவல் ஆக்கத்தினுள் கிராமியப் புராணத்தின் அம்சங்களோடு பொருத்தமாக இணைந் திருக்கின்றன. நாஞ்சில் நாடன் முற்போக்குவாதிகளில் ஒருவராகத் தம்மைக் கருதிக் கொள்வதில்லை எனினும்,

உழைப்பாளியின் கதை சொல்லும்பொழுது இயல்பாக முற்போக்குவாதம் நாவலில் இடம் பெறுகிறது.

கிராமப்புறத்தில் ஒரு தனியனின் துயரம் பற்றியது மாமிசப்படைப்பு. பம்பாய் போன்ற பெரிய நகரத்தில் ஒரு தனியனின் அவலம் பற்றியது மிதவை. நாஞ்சில் நாடன் சொற்களை விரயம் செய்வதில்லை. உள்மன அவலங்களை வைத்து துயரக்கதை சொல்வதில்லை. புறநிலை நோக்கிலிருந்து நுட்பமான விவரங்களைத் தேவையான அளவுக்கு தருவதன் மூலம், தான் தேர்ந்த கலைஞர் என்பதை நிரூபித்துக் கொள்கிறார். 'மிதவை' இதற்கு தக்க சான்று.

'மிதவை'யில் வரும் சண்முகம், தன் சொந்த பூமியில் வேலை கிடைக்காமல் அலைந்து அய்யரின் உதவியோடு பம்பாய்க்குச் செல்கிறான். எங்கோ ஒரு நிறுவனத்தில் ஒரு வேலையில் ஒட்டிக் கொள்கிறான். தலை சாய்த்துப் படுக்க குறைந்த அளவு இடத்திற்காக அங்குமிங்கும் துரத்தப்படுகிறான். ஒரு சிறிய பலகை அல்லது பொந்து கிடைத்தாலும் அவனுக்குப் போதும். அதிகாலையில் ரயில்பாதை ஓரங்களில் குடையால் முகம் மறைத்து மலம் கழிக்கவேண்டும். பகல் நேரத்தில் எங்காவது இடம் தேட வேண்டும். பாலுணர்வு என்ற உடல் வாதனை, மானம், அவமானம் பார்க்கவேண்டிய நிலை, எப்படியாவது கொஞ்சம் இடம் தேவை. ஊருக்குச் சென்று திருமணம் செய்து கொள்ளவே இயலாது. சென்று திரும்பினால் கடன் தொல்லை.

நாஞ்சில் நாடன் மிகுந்த நுட்பத்தோடு இந்த தனி மனிதனின் வேதனைகளைப் படைப்பாக்கியுள்ளார். இவனுக்கு எதிர்காலம் இல்லை. வயிற்றைக் கழுவுவது மட்டுமே இவனுக்கு வாழ்க்கை. பம்பாயில் குவிந்துள்ள இலட்சக் கணக்கான இளைஞர்களுக்கிடையில் இவன் முகம் முற்றாக அழிந்து போகும். இவனைக் காப்பாற்ற எந்தச் சக்தியும்

இல்லை. ஏதாவதொரு பாசிசக் கும்பலில் இவன் சேர்ந்து தன்னை நிலைப்படுத்திக் கொள்ள விரும்பலாம்.

## ஆ. மாதவன் 12

வானத்தில் எவ்வளவு நேரம் பறந்தாலும் மண்ணுக்கு/தென்னை மரத்துக்கு கிருஷ்ணப் பருந்து வரத்தான் வேண்டும் **கிருஷ்ணப்பருந்து**, நாவலில் ஒரு வலுவான குறியீடு.

சாமியப்பாவின் பூர்வீகமும் நற்குணங்களும் அலாதியானவை. தன் தோப்பு விளையில் வாழும் பல குடும்பத்தினருக்கு சாமியப்பா ஒரு காப்பாளர் மாதிரி வாழ்கிறார். அம்பாளிடம் பக்தி கொண்டவர். பாட்டாவும் தன் தந்தையாரும் வாழ்ந்த ஆடம்பரமான, பல பெண்களோடு உறவு கொண்டிருந்த பாரம்பரியத்திலிருந்து தன்னை விலக்கிக் கொள்ளத்தான் சாமியப்பா விரும்புகிறார். தன் மனைவி சுப்புலட்சுமி இறந்த பிறகு, உறவினர் தூண்டினாலும் இன்னொருத்தியோடு வாழ்க்கையை இணைத்துக்கொள்ள அவர் விரும்பவில்லை. இம்முறையில் சாமியப்பா பெருமைக்குரியவர்தான். பலர் மரியாதைக்கும் உரியவர்.

ஆனால் உடம்பு இவரை விட்டுவைத்ததா? சிறுவயதில் பார்த்த வளர்ப்புத் தாயின் நிர்வாணக்கோலம் இன்னும் அவர் மனத்தில் நிறைந்திருக்கிறது. தன் அறையில் நிர்வாணப் பெண்ணின் அழகிய சித்திரம். உடம்பு அவரை வீழ்த்துவதற்கு சமயம் பார்த்திருக்கிறது.

ராணி இவருக்கு மகள் மாதிரி. ராணியின் கணவன் வேலப்பன் கூட ஒரு காலத்தில் இவருக்கு அடங்கியிருந்த பையன். பால் விற்பனைக்கான தொழிற்சங்கத்தில்

சேர்ந்த பிறகு, சாமியப்பாவுக்கு எதிராகப் பேசக் கற்றுக் கொண்டான். போராட்டத்தில் சிறைப்பட்ட இவனை, வீட்டுக்கு மீட்டுவர சாமியப்பாவின் ஆதரவை ராணி கேட்கிறாள்.

சாமியப்பாவின் உடல் விழித்துக் கொண்டு இரை கேட்கிறது. ராணி தன்னைத் தர வரும் தருணத்தில் சாமியப் பாவுக்கும் மனம் விழித்துக் கொள்கிறது.

இந்தக் கதையை மாதவன் நிதானமாக அழகாகச் சொல்கிறார். இயற்கை வர்ணனைகளுக்கிடையில் வைத்துச் சொல்கிறார். சாமியப்பா போலிச் சாமியாரும் அல்ல. சாமியப்பா இந்த முதல் சோதனையில் வெற்றி பெறுகிறார். இவருக்கு இன்னும் சோதனைகள் காத்திருக்கின்றன. நமக்கு இப்படித்தான் தோன்றுகிறது. மாதவன் சொல்லியிருப்பது பாதிக்கதை.

இந்த உடம்பின் கதையைத்தான் **தூவானம்** நாவலும் சொல்லுகிறது. 'தூவானம்' மீண்டும் ஒரு குறியீடு. ஒரு வகை மன நெருக்கடி என்பதை இது குறிக்கிறது. குடும்பத்திற்குள் நண்பர்களுக்குள் நிலவும் மன நெருக்கடிக் கிடையில் கதை வளர்கிறது.

எழுதப்பட்ட முறையில் மிக வித்தியாசமான நாவல் என்று சொல்லத்தக்கது மாதவனின் 'தூவானம்'. வேணுவும் நாயகமும் புத்தகப் பிரியர்கள், நூலகத்தில் அப்பாவின் விருப்பத்திற்கெதிராகப் புத்தகங்களை வாங்கிக் குவிக்கின்றனர். இருவரும் பழைய, புதிய / தற்காலத் தமிழ் இலக்கியங்கள் பற்றிப் பேசுகிறார்கள். மலையாள இலக்கியங்கள் பற்றிக் கருத்துச் சொல்கிறவன் வேணு. வேணு அழகான தமிழ் நடையில் சு. ரா.வின் நடை என்று சொல்லத்தக்க நடையில் கதை எழுதுகிறவன். அயல் வீட்டுக்காரி, திருமணமான லோஜனியை தனக்குள்

காதலியாக வரித்துக் கொண்டு, அந்தக் கற்பனை அனுபவத்தில் திளைத்து கதை எழுதுகிறான். நாயகம் பற்றிக் கூட மிக நுட்பமாக ஒரு கதை எழுதி, நண்பனின் கோபத்தைச் சம்பாதித்துக் கொண்டவன் வேணு.

நாவலில் வரும் எல்லா மனிதர்களும் குணரீதியில், நாவலுக்குப் புதியவர்கள். நாயகத்தைப் பற்றிய உண்மை அறியும் தேடலில், சுற்றிச் சுற்றிச் செல்லும் பாவனையில் நாவல் அமைகிறது. மீண்டும் ஒரு பாலுணர்வு பற்றிய நாவல் என்று யாதவன் நாவலைச் சொல்லலாம்.

நாயகம் பெருத்த உடம்பைக் கொண்டவர். அசிங்கமாகச் சிரிப்பவர். புத்தகங்களைப் படிப்பதில் தன்னை மூழ்கடித்துக் கொண்டவர். மனைவி ரங்கம்மா அழகி. தேன்குரலில் சினிமாப் பாடல்களைப் பாடுகிறவள். இவர்களுக்குக் குழந்தை இல்லை. மனைவியைப் பற்றி தன் நண்பனிடம் குறை சொல்கிறார் நாயகம். புத்தகம் திருப்பித் தரவில்லை என்று நண்பனைக் கடுமையாகக் கோபித்துக் கொள்கிறார். திருமணமானவளைத் தனக்கு காதலியாகத் தனக்குள் கற்பித்துக் கொண்டிருக்கும் வேணுவின் தவற்றைக் கண்டுபிடிக்கிறார். இத்தனைக்கும் அவர் மிக நல்லவர். அப்பா தன் மகனிடம் கொண்ட ஆழ்ந்த அன்பு, அவரது தீராக்கோபத்தில் கடுஞ்சொற்களாக வெளிப்படுத்துகிறது. கணவன்- மனைவிக்குக் குழந்தை இல்லை. மருத்துவர் தரும் ஆலோசனை பயனில்லை. புத்தகங்களில் இவர் ஏன் தன்னை மூழ்கடித்துக் கொண்டார்? தயாளகுணங்களில் இவர் எப்படி நிறைந்திருக்கிறார்? கோபத்தில் ஏன் வெடிக்கிறார்? இறுதியாக இவர் தற்கொலை செய்து கொண்டார்.

இறுதியில் உண்மை தெரிகிறது. இவருக்கு ஆண்மை இல்லை. இதை மறைக்க எத்தனையோ வேடங்களில்

தன்னையும் மற்றவர்களையும் ஏமாற்றினார். உண்மை சகிக்க முடியாமல் தற்கொலை செய்து கொண்டார்.

சாமியப்பா பக்தியில் தன்னை மறைத்துக் கொள் கிறார். படிப்பில் தன்னை மறைத்துக் கொள்கிறவர் நாயகம். இருவரும் வாழ்வின் நிதர்சனங்களை உடைத்துப் பார்க்கும் தைரியம் அற்றவர்கள். சமூகம் தேங்கித்தான் கிடக்கிறது. தனிமனிதர்களைக் குற்றம் சொல்லிப் பய னில்லை. கலைத்தரமான இவ்விரண்டு நாவல்களுக்காக மாதவனை நாம் பெரிதும் பாராட்டலாம்.

## விட்டல்ராவ் 13

எண்பதுகளில் வெளிவந்த விட்டல்ராவின் நான்கு நாவல்களைப் பற்றி இங்கு சொல்லலாம். இந்த நாவல்கள் மூலம் விட்டல்ராவ் தன்னை ஒரு தரமான நாவலாசிரியர் என்று நிலைநிறுத்திக் கொள்கிறார். இவர் தன் படைப்புக் களில், இவன் 'வீரன்' 'கதாநாயகன்' என்று எவரையும் உயர்த்துவதில்லை. இயல்பான சித்தரிப்புகள் மூலம் வாழ்க்கையை, வெவ்வேறு வட்டார வாழ்க்கையை நம்முன் நிறுத்துகிறார். இந்த வாழ்க்கைக்குள் வாசகர் களாகிய நாம் ஒருமுறை பயணம் செய்த அனுபவத்தைப் பெற்றுக் கொள்ளலாம். ஆவேசம், மிகை உணர்ச்சி இல்லாத அடக்கமான படைப்பு என்ற முறையில் விட்டல் ராவ் குறிப்பிடத்தக்கவர்.

குணமற்றதெனச் சொல்லப்படும் காலமும், குணமும், முகமும் கொண்டதாகிய வெளியும், இணைந்தும், வெட்டி யும், விரிந்தும் செல்லும் கோலத்தை நாவலாக்கத்திற் குரியதென விட்டல்ராவ் கருதுகிறாரென்று தோன்று கிறது. **தருணம், காலவெளி** என்ற நாவல் தலைப்

புக்கள் மூலம் இதை நாம் அறியலாம். சமூக வாழ்வையும் மனிதனின் தொழில் நுட்பத்திறன்களையும் பற்றி நுல்லிய மான விவரங்களை இவர் தன் நாவல்களில் தருகிறார். மீண்டும் அவளுக்காக நாவலில் விமானப்படையில் பணியாற்றும் பசுபதி என்ற தொழில்நுட்பப் பணியாளன் மூலம் இவனது தொழில் நுட்பங்களையும் இவன் பணி புரியும் பஞ்சாப், அசாம், முதலிய பிரதேசங்களின் மக்கள் வாழ்வைப் பற்றிய விவரங்களையும் தருகிறார். மற்ற வர்கள் நாவலில் கிருஷ்ணவேணியின் தாய்மைப் பேற்றின் போது ஏற்படும் உடலியல் ரீதியான பலவகைச் சிக்கல் களையும் சிக்கல்கள் தீர்க்கும் முறையில் மருத்துவ சோத னைகள், மருத்துவம் பற்றிய தொழில் நுட்ப விவரங் களையும் ஆசிரியர் தருகிறார். இதே போல, மருத்துவ மனையில் பணியாற்றும் பல்வகை ஊழியர்கள், இவர் களின் பலவகைப் போக்குகள், தொழிற்சங்கப் போராட்டம் ஆகியவை பற்றி நுட்பமாகச் சித்தரிக்கிறார். வாசகர் களின் சமூக அனுபவங்கள் பற்றிய எல்லையை ஆசிரியர் விரிவுபடுத்துகிறார்.

பசுபதி மணவறையில் சாவித்திரியைப் பார்த்த பொழுதே, அவளது ஆண் சாயலை வெறுத்து அவளை ஒதுக்கினான். மூன்றாண்டுகள் இப்படி கழிகின்றன. சாவித்திரி இன்னொருத்தனோடு உறவு கொண்டிருப்ப தாகப் பொய்சொல்லி சாட்சிகள் தயாரித்து அவளிடமிருந்து விவாகரத்துப் பெறமுடியும் என்று உறவினர் சொன்ன யோசனையை பசுபதி மறுத்தான். இவன் சாதாரண மனிதன். எனினும் இவனே அறியாமல் இவனுக்குள் ஆழ்ந்த அறஉணர்வு செயல்படுகிறது. விவாகரத்துக்கு இணங்க தொடர்ந்து மறுத்த சாவித்திரி, உறவினர்களின் தூண்டுதலை பசுபதி ஏற்கவில்லை என்று அறிந்தவுடன், விவாகரத்துக்கு ஒப்புக் கொள்வதாகத் தெரிவிக்கிறாள். இவளும் சாதாரணப் பெண். இவளுக்குள்ளும் செயல் படுவது அறஉணர்வு. இதை ஆசிரியர் உரத்துச்சொல்லவு மில்லை. நாம் புரிந்து கொள்கிறோம். இந்த அம்சம்

இந்த நாவலை சீதை, இராமன் முதலியவர்களோடு சார்ந்த தொன்மையான பாரம்பரியத்தோடு இவர்களை இணைக்கிறது.

தொழிற்சங்கப் போராட்டத்தில் வெற்றி தோல்வி இல்லை என்கிறான் பரதன். போராட்டம் வாழ்வின் இயல்பு. இதை நாவல் சொல்லுகிறது. என். ஜி. ஓ. - களின் போராட்டத்திற்கு ஆதரவு தருவதை முழுஅளவில் ஏற்றுக்கொள்ளாத மருத்துவமனை ஊழியர்கள், தமக்கொரு சிக்கல் வந்தவுடன் திடீர் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுகிறார்கள். ஒரு களத்தில் தொடங்கிய போராட்ட உணர்வு, வாழ்வின் இன்னொரு களத்திற்குள்ளும் விரிவடைகிறது. கிருஷ்ணவேணி, கடுமையான சிக்கல்கள், துயரங்கள் ஆகியவற்றை அனுபவித்து குழந்தை பெறுகிறாள். மகப்பேற்றில் வெற்றி எது? தோல்வி எது? இல்லை என்கிறான் வரதன். கிருஷ்ணவேணியின் கணவன் பத்ரி, இறுதிவரை இதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. இருவகைப் போராட்டங்களின் இணைப்புக் கண்ணியாக பத்ரியை ஆசிரியர் சித்தரித்தாலும், இந்தப் போராட்டங்கள் பத்ரிக்குள் ஒன்றுடன் ஒன்று கலந்து இணையவில்லை. போராட்டம் வாழ்வின் இயல்பு என்பதை வரதன் மூலம் சித்தரிப்பதில் ஆசிரியரின் சாதனை போற்றத்தக்கது.

காலவெளி எழுபதுகளில் சென்னையில் இயங்கிய நான்கு ஓவியர்களைக் கொண்ட நால்வர் குழு பற்றிய நாவல். சக்கரவர்த்தி, உன்னிக்கிருஷ்ணன், முருகேசன், தருமன் ஆகியவர் இக்குழு உறுப்பினர். ஒருமுறை சிறப்பாகச் செயல்பட்டு, பிறகு ஓய்ந்து, பிறகு மீண்டும் முயற்சி எடுத்து புதுப்பித்த போதிலும், மீண்டும் கலைந்துவிடுகிறது இக்குழு. முருகேசனும் தருமனும் தொடக்கம் முதலே தம்பெருமை, புகழ் தேடுபவர்கள். உன்னிக்கிருஷ்ணன் ஒரு சமயம் முற்போக்காளர்கள் கூட்டத்தில் இருந்து, பின்னர் பிரிந்து வந்து அருவ ஓவியங்களில்

ஈடுபட்டவர். சக்கரவர்த்திக்குள் ஓவியத்தின் தீவிரமான நுண்ணியக்கங்கள் பல ஆண்டுகள் செயல்பட்டன.

இவர்கள் வாழ்வின் கண்ணோட்டம் அவரவர் ஓவியங்களை, வண்ணச்சேர்க்கைகளை நிர்ணயித்தது. முருகேசன், தர்மன் ஆகியவர்களின் போக்கும்; உன்னிக்கிருஷ்ணன், சக்கரவர்த்தி ஆகியவர்களின் போக்கும் முற்றிலும் எதிரெதிர்த்திசையில் இயங்கின. இறுதியில் கலையை வணிகப்பொருளாக்கும் வழிக்கு சக்கரவர்த்தியும் வந்து சேர்கிறான். சென்னையிலும், சக்கரவர்த்தி சென்ற கனடாவிலும் இருந்த ஓவிய விமர்சகர்கள் இரண்டொருவரைத்தவிர, மற்றவர் கலையின் நுண்ணியக்கங்கள் அறியாதவர். வணிகக் கலாச்சாரத்தின் குணங்களைத் தமக்குள் போற்றியவர். கலைஞர்களின் ஓவியத்தை வாங்கி வைத்து விற்பனை செய்யும் நிறுவனத்தினரும் இத்தகையவர். கலையின் புரவலர்கள் என்று சொல்லித் திரிபவர்களும் இப்படி. இவர்களையெல்லாம் விமர்சனத் திற்குட்படுத்துகின்றான் பிரசன்னன். கடந்த சில பத்தாண்டுகளில் வணிகக் கலாச்சாரத்தின் ஊடுருவல், மனித வாழ்க்கையின் அனைத்து அம்சங்களையும் பாதித்து, வாழ்க்கையை மலினப்படுத்தியிருக்கிறது. முற்போக்குவாதிகளும் இதற்கு விதிவிலக்கல்லர். வாழ்க்கையைப் பொருளியல் சக்திகள் ஆதிக்கம் செய்வதற்கு எதிராக, கலையின் இயக்கம் இருக்க வேண்டும் என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். அதே சமயம், பொருளியல் சக்திகளுக்கு கலையும் உட்படுகிற பரிதாபத்தையும் நாம் புரிந்து கொள்ள முடியும். தருமன், சக்கரவர்த்தி ஆகிய இருவகைக் கலைஞர்களையும் அவர்களது வாழ்க்கை மூலம், வாழ்வின் மூலம் ஆழ்ந்து பார்த்திருந்தால் நாவலின் பரிமாணங்கள் கூடியிருக்கும். பிரசன்னன் என்ற விமரிசகனுக்கும் இத்தகைய புரிதல் இல்லை. பிரசன்னன் வழியாக விட்டல்ராவ் தெரிகிறார் என்று வைத்துக் கொண்டால், விட்டல்ராவையும் இப்படி விமரிசனம் செய்வது தகும்.

சக்கரவர்த்தியின் சில ஓவியங்கள் பற்றி ஆசிரியர் தருகிற விவரணைகள், நவீன ஓவியத்தை நாம் புரிந்து கொள்ள உதவும். ஆசிரியர் சொல்லும் கலைக்குழுவின் வழியே, சென்னை ஓவியர்கள் சிலரது முகத்தை நாம் பார்க்கலாம்.

நாவலின் இன்னொரு பரிமாணம், சென்னையில் இருந்த ஆங்கிலோ இந்தியர்களைப் பற்றியது. வாழ்வின் அறநெறிப் பண்புகள், நுண்ணுணர்வுகள், ஆகியவை பொருளாதார அரசியல், அதிகார தேட்டங்களுக்கு அடியில் அமுங்கின அல்லது நாசமாயின. இந்த நாசத் திற்கெதிராக வாழ்வையும் கலையையும் உன்னத தளங் களில் செலுத்தியவர் மிகச்சிலர் மட்டுமே. இவர்களையும், பொருளாதாரம் பலி கொள்வது, பொருளாதாரத்தின் ஆதிக்கம் இடைவெளி விடாமல் எங்கும் பரவி இறுக்கிய தைத்தான் காட்டுகிறது. ஒரு கலைஞனுக்குள் மட்டும் இத்தகைய இறுக்கத்தைக் கண்டு விமரிசனம் செய்வது போதாது. சமூக நெருக்கடிக்குள் உயரிய கலைஞர்களும் சிக்கி, வெளியேற முடியாமல் திணறி, தம் ஆன்மா அழி வதை ஒவ்வொரு நாளும் பார்த்து, அந்த வேதனையை தம் மனத்திற்குள் எங்காவது ஒதுக்கி வைத்து, அப்புறம் கனவுகளில் அஞ்சி, பெருமூச்சு விட்டு, வாழும் வேத னையை ஒரு படைப்பு வெளிப்படுத்த வேண்டும். முற்போக் காளர்கள் என்று காட்டிக்கொள்ளும் சிலரையும், அதைப் போலவே பத்திரிகையாளர்களையும் பிரசன்னன் இகழ்ந்து பேசுகிறான். முற்போக்காளர்களும் இப்படி சமூக நெருக்கடிகளுக்கிடையில் தம்மை இழந்தவர்கள் தான். கலை விமர்சனம் என்பது அதன் ஆழத்தில், மெய் யியல் அணுகுமுறையில் வேர்கொள்ள வேண்டும். இத்த கைய பார்வையின் விரிவு, மனிதர்கள் / கலைஞர்கள் பற்றிய வேறு பரிமாணங்களை வெளிப்படுத்தும். நாவல் இலக்கியத்தின் செறிவு கூடும். வாசகர்களுக்குள் ரசனை என்ற தளத்திற்கு அடியில் கிளறி, வாழ்க்கை பற்றிய மெய்யியல் ஆய்வை அவர்களுக்குள் தூண்டும்.

நதிமூலம் தமிழில் ஒரு முதன்மை நாவல் என்று மதிக்கத்தக்கது. இந்த நாவல் மூலம் விட்டல்ராவ் தமிழ் நாவலாசிரியர்களின் முன்வரிசைக்கு வருகிறார்.

இந்த நாவலில் சொல்லப்படும் கதை என்பதற்கு வெளியில் நம் உணர்வுகளை, நம் கவனத்தைப் பாதிக்கும் அம்சங்கள் பல உள்ளன. 1920 முதல் 65 வரையிலான தமிழ்நாட்டு அரசியல், சமூகம், சினிமா, நாடகம், ஓவியம், குடும்பங்களில் இடம்பெறும் கலைகள், உடை, உணவு, வானொலி, வண்டி, கிராமபோன், ஓவர்கோட், பொத்தான்கள், பிரதேசங்கள், பிரிட்டிஷ்காரர், கட்டிடக்கலை, ஹைதராபாத், நிஜாம்காலத்து சொகுசு வாழ்க்கை, என். ஜி. ஓ. வாழ்க்கை இம்மாதிரி நூற்றுக்கணக்கான சித்திரங்கள் இந்த நாவலின் ஒவ்வொரு பக்கத்திலும் மிகுந்த கவனத்தோடு நுட்பமாக வரையப்பட்டுள்ளன. இவை சொல் ஓவியங்கள். தாராசுரம் போன்ற கோயில்களில் கையகல இடத்தில் மிக நுட்பமாகச் செதுக்கப்பட்டிருக்கும் சிற்பங்களின் நுட்பத்தோடு இவை வரையப்பட்டுள்ளன. வேறு எந்தத் தமிழ் நாவலிலும் ஒரு சேர இத்தனை சொல்லோவியங்களையும் நாம் ரசிக்கமுடியாது. இவற்றை அனுபவிப்பதற்கு இந்த நாவலை பலமுறை படிக்க வேண்டும்.

நாவலில் நூற்றுக்கும் மேற்பட்ட மனிதர்கள். மூன்று தலைமுறைகள் இடம்பெறுகின்றனர். நாமக்கல்லில் வாழும் மாத்வர் சமூக மனிதர்கள், முப்பது அல்லது நாற்பது ஆண்டுக்கு முற்பட்ட நாமக்கல் நகரம், தெருக்கள், கோயில்கள், குளங்கள், மலைக்கோட்டை, மாத்வர் சமூகத்தினுள் விடாப்பிடியாகக் கடைபிடிக்கப்படும் சம்பிரதாயங்கள், விழாக்கள், கதா கலாட்சேபங்கள், பெண்கள், குழந்தைகள், திருமணம், சமூகத்தை விட்டு வெளியேற்றம் இவையனைத்தும் நம் கண்முன் விரிகின்றன. மாத்வர் சமூகம், சாதி, சடங்குகள், சம்பிரதாயங்களுக்குள் சிக்கி இவற்றைவிட முடியாமல் இவற்றுக்குள் அழுதும், ஆற்ற

லும், பாதுகாப்பும் கண்டு அதேசமயம், மூச்சுத்திணறு வதை நாம் கவனத்தோடு படித்து இவர்களின் துயரங் களை, இன்பங்களை அனுபவிக்கிறோம். இந்தச் சமூகம் தனக்குள் உடைந்து எங்கெங்கோ சிதறுகிறது.

இந்த நாவலில் நமக்கு மிக அருகில் தென்படுபவர்கள் என்று இருவரைக் குறிப்பிடலாம். ஹனுமி, கிட்டா இவர் கள் மூலம் சமூக வாழ்வின் பெரும் பரப்புக்குள் நாம் செல் கிறோம்.

தமிழ்நாட்டு விடுதலை வரலாற்றில் சோமையாஜுலு குறிப்பிடத்தக்கவர். இவர் தீவிரவாதி. இவரைச் சுற்றி இவரோடு சேர்ந்து ஓர் இளைஞர் குழு இயங்குகிறது. சென்னையில் கர்னல் நீலின் சிலையைத் தகர்க்கும் முறை யில் இவர்கள் செயல்படுகின்றனர். திருநெல்வேலி, சேலம், மதுரை, சென்னை என இவர்கள் நடவடிக்கைகள் விரிவடைகின்றன.

ஹனுமியின் உறவினர் சுப்பாராவ் மிதவாதி, காந்திய வாதி, இவரும் இவரைச் சேர்ந்தவர் நடவடிக்கைகளும் சொல்லப்படுகின்றன. வீரசாகசங்களை விரும்புகிறவன் ஹனுமி. ஹனுமியின் உறவினர்தான் கிட்டாவும். இவனது வாழ்க்கை வேறு தடங்களில் சுற்றி வருகிறது. இவன் என்.ஜி.ஓ. என்.ஜி.ஓ. வுக்கான எல்லா விவரங் களும் இவன் மூலம் சொல்லப்படுகின்றன அடிக்கடி இடமாற்றம், தவிர்க்க முடியாமல் ஊழல்களில் ஈடுபடுதல், விசாரணை-இப்படி பல செயல்கள். சினிமாத்துறைக்கு இவனுடைய பெண் போய்ச் சேர்கிறாள். அதனால் இவனுக்கு மகிழ்ச்சி, மன உளைச்சல்கள், இவனுக்கு கொஞ்ச காலம் தேவதாசிகளோடு உறவு. எதையும் இவன் குறைத்துக் கொள்ளவில்லை. இவனுக்குள் இளமைக் காலத்தில் ஒரு வீரன் இருந்தான். இவனுக்கும் தியாகம் தெரியும். உழைப்பு தெரியும் வாழ்க்கைச் சூழலில் இவன் பட்டவை அதிகம். அனுபவிப்பது கொஞ்சம். இறுதிவரை

ஓட்டல் தீனியின் சுவைக்கு இவன் அடிமைப்பட்டவன். இதனால் இறுதியில் பேதிகண்டு சாகிறான். அப்பொழுதும் கூட எல்லாவற்றையும் ஒருமுறை திரும்பிப்பார்த்து மனநிறைவோடு சாகிறான்.

ஹனுமி வீரமிழந்து, இப்பொழுது கதர்க்கடை வியாபாரி. ஹனுமியையும் கிட்டாவையும் வாழ்க்கை அடித்து நொறுக்கி ஒரே தளத்துக்கு கொண்டு வந்து சேர்த்திருக்கிறது. கிட்டாவின் மூலம் ஆசிரியர் எதையாவது சொல்கிறாரா? இல்லை. கிட்டா நமக்குள் வந்து விடுகிறான். இவனுக்குள் நம்மைப் பார்த்துக் கொள்கிறோம். சமூகம் சீரழியும்போது, நாறிவரும் போது நாம் எப்படி தப்ப முடியும்? ஒரு பெரும் வரலாறு நடந்து, முடிவு பெற்றதை போன்ற உணர்வுதான் நாவலைப் படித்து முடிக்கும் பொழுது நமக்கு ஏற்படுகிறது. நாவலில் வரும் ஒவ்வொருவர் பற்றியும் நாம் பேசவேண்டும். இவர்கள் எல்லோரும் இன்றும் நம்மோடு இருப்பவர்கள்தான். இவர்களோடுதான் நமக்கு வாழ்வு. விடுதலைக்குப் பின் சமூகம் கரையேறவில்லை. இந்த நதிக்கு மூலம் எது என்பதும் தெரியவில்லை. நம் வரலாற்றின் நிரந்தரமான சோகம் நாவலில் தெரிகிறது.

## பிரபஞ்சன் 14

எண்பதுகளில் நாவலாசிரியராகத் தோற்றம் கொண்டவர்களுள் பிரபஞ்சனும் ஒருவர். இவர் எழுதி வெளியாகியுள்ள நான்கு நாவல்களுள் குறிப்பிடத்தக்கவை ஆண்களோடு பெண்களும், சந்தியா ஆகியவை. பத்திரிகைத் தேவைக்காக பிரபஞ்சன் எழுதிய நாவல்கள் இரண்டு — **காதல் என்னும் ஏணியினிலே, சுகபோகத் தீவுகள்.**

ஒருவனை ஆளாக்குவதற்காக, தொழில் அதிபர் ஆக்குவதற்காக இரண்டு பெண்கள் முயற்சி செய்வதைச் சொல்லும் நாவல் 'காதல் என்னும் ஏணியிலே'. ஆணும் பெண்ணும் நண்பர்களாக இருக்கமுடியும். ஒருவரை உயர்த்துவதற்கு நட்பு செயல்பட வேண்டும். நாவலில் வெளிப்படும் இந்த நோக்கம் வரவேற்கத்தக்கது. ஆண் பெண் உறவு என்றாலே, காதல் என்றும், காதல் மயக் கத்தை முழு அளவில் நாவல் சித்தரிக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கும் தமிழ் வாசகர்களுக்கு, இந்த நாவல் புதிய ஒளிதரக்கூடும். ஆனால் நாவல் நெடுகிலும் முக்கியமான விவரணைகளோடு சித்தரிக்கப்படும் மேட்டுக்குடி வாழ்வின் அழகுகளிலும், நளினங்களிலும் வாசகர்கள் தம்மை இழந்து விடும் விபத்தை இந்த நாவல் கொண்டிருக்கிறது. மீண்டும் வணிகக் கலாச்சாரத்திற்கு வாசகர்களை இந்தப் போக்கு உட்படுத்தும். 'ஆனந்தவிகடன்' வேறு எதை நாவல் என வாசகர்களுக்குத் தரும்?

பொதுவாக அன்பின் மேன்மை பற்றி ஜே. கே. பாணி யில் தன் நாவல்களில் பேசுகிறவர் பிரபஞ்சன். எரிக் ஃபிராம் எழுதிய The Art of loving என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டதைப் போன்ற அன்பு உரைகள் வாசகர்களை மயக்கவல்லவை.

பிரபஞ்சனின் 'ஆண்களோடு பெண்களும்' என்ற நாவல் குறிப்பிடத்தக்க சிறந்த நாவல். கொண்டங்கி மாமா அன்பான மனிதர். 'கடவுள் எனக்கு கொடுக்கிறார். நான் மற்றவர்க்கு கொடுக்கிறேன்' என்பவர் இவர். மோட்ச ராயர் ஃபிரெஞ்சு ராணுவ வேலையிலிருந்து ஓய்வு பெற்று வாழ்கிறவர். மனைவி சின்னப்பூ அற்புதமேரி, இவரும் அன்பின் திருஉருவம். மோட்சராயர் வீட்டு வேலைக்காரி யாக வந்த மிஷ்மா என்ற இளம் பெண்ணிடம் தன்னை இழக்கிறார். மிஷ்மா ஏன் இப்படிச் செய்தாள்? மிஷ்மாவை இதற்குத் தூண்டியவள் அவள் தோழி கேப்ரி. வறிய வாழ்க்கையில் ஒரு பாதுகாப்பைத் தேடிக்கொள்ள வேண்

டும். வயதானவர்க்கு தன்னைத் தரலாம். 'என் எஜமானர் எனக்கு உணவும் உடையும் தருகிறார். அவருக்கு என் உடலைத் தருகிறேன்' என்பது கேப்ரி மிஷ்மாவின் கொள்கை. இவர்களின் வறுமை இவர்களுக்கு ஒரு தத்துவத்தைத் தருகிறது. கொண்டங்கி மாமா சொல்ல, சின்னப்பூ மிஷ்மாவை ஏற்கிறார்.

தி. ஜானகிராமனும் தமிழ்வாசகர்களுக்கு சிலவற்றைச் சொல்லி இருக்கிறார். நமக்கு அன்பு தெரியாது. உடல் உறவின் அழகு தெரியாது. சுதந்திரம் தெரியாது. நாம் கற்றுக்கொள்ள வேண்டும். பிரபஞ்சன் நாவலுக்குள்ளும் இந்தப் போக்கு செயல்படுகிறது. வாழ்க்கையை நேசிக்க வேண்டும். வாழத் தெரியவேண்டும். வசதி உள்ளவர், தம் வசதிகளைப் பிறரோடு பகிர்ந்து கொள்ளவேண்டும். இந்தக் கல்வி தமிழ் வாசகர்களுக்குத் தேவைதான். இந்தப் போக்கின் நெகிழ்ந்த பரிமாணம் பாலகுமாரன்.

எண்பதுகளில் தீவிரம் பெற்ற பெண்ணிய நோக்கில் எழுதப்பட்டது 'சந்தியா'. 'சந்தியா' ஒரு வித்தியாசமான நாவல். பஸ்ஸில் ஒரு முரடன் தகாத முறையில் நடந்து கொண்டால் ஒருபெண் என்ன செய்யவேண்டும்? தன்னைப் பெண் பார்க்க வரும் ஆணிடம் ஒரு பெண் என்னென்ன கேள்விகள் கேட்கவேண்டும்? இப்படி வாழ்வில் பல்வேறு சூழல்களில் ஒரு புதுமைப்பெண்ணை நிறுத்தி அவளது எதிர்வினைகளை ஒரு பாட நூல் போல இந்த நாவல் சொல்லுகிறது. பாட நூல் ஆகிவிடும் விபத்தை பிரபஞ்சனால் தவிர்க்க இயலவில்லை.

சந்தியா ஒரு புதுமைப்பெண். பெற்றோரின் கட்டுப்பாடுகளை உடைத்துக் கொள்ள ஒரு விடுதியில் தங்கி வேலைக்குப் போகிறாள். மீண்டும் இங்கு ஒரு பாடம். எதிரிலுள்ள சேரிவாழ் மக்களுக்கு சேவை செய்கிறாள். மீண்டும் ஒரு பாடம். உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்குத் தன் நண்பன் பள்ளி நடத்துகிறான். நண்பனோடு உடல்

உறவு வைத்துக்கொள்ளலாம். திருமணம் தேவையில்லை. மீண்டும் ஒரு பாடம். 'சந்தியா' இயல்பான நாவலாக உரு வாகவில்லை. பிரபஞ்சனின் பெண்ணியப் பார்வை, பெண் ணுக்குக் கல்வி, அலுவலக வேலை, மக்களுக்கு சேவை, மன உறவை விலக்கிய உடல் உறவு என்ற முதலாளிய எல்லைக்குள் கட்டுப்பட்டிருக்கிற பார்வை. பிரபஞ்சனின் 'சுகபோகத் தீவுகள்' ஒரு அரசியல் நாவல். சுஜாதாவின் 'பதவிக்காக'வும் போலவே இதுவும் ஒரு வணிக முறை நாவல். ஜூனியர் விகடன், தராசு ஆகியவற்றின் தரத் தில் அரசியல் விமரிசனங்களை இந்த நாவல்கள் முன் வைக்கின்றன.

அரசியல் அதிகார ஏணியில் விடாப்பிடியாக ஏற வேண்டும். சதி செய்து மற்றவர்களைச் சறுக்கி விழச் செய்யவேண்டும். பணம், சதி, தேவைப்பட்டால் கொலை இவற்றைக் கொண்டு தன் பதவியைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டும். பெண்களை வசப்படுத்திக் கொள்ள வும், அவர்களை வைத்துக் காரியம் செய்து கொள்ளவும் தெரிந்திருக்க வேண்டும். இந்தப் போக்கில் இந்த அரசியல் நாவல்கள் நடைபெறுகின்றன.

சில சமயம் நாவலாசிரியர் தனக்குத் தெரிந்த அரசியல் வட்டார இரகசியங்களை நாவல் வழியே உடைத்துப் போடலாம். தலைவர்கள், காமுகர்கள், சதிகாரர்கள் என்று திட்டித் தீர்க்கலாம். நாவலாசிரியனின் தீவிரமான விருப்பு வெறுப்புகளை இந்த நாவல்கள் வெளிப்படுத்து கின்றன. தமிழ்நாடு, புதுச்சேரி அரசியலை இந்த நாவல் கள் சொல்கின்றன. இப்படிச் சொல்லும் பதிலுரைகள் இந்த நாவல்களைக் காப்பாற்ற முடியாது. ஒரு கட்சி தன்னைப் பெருமைப்படுத்திப் பேசும். மாற்றுக் கட்சி களைக் கேவலப்படுத்தும். தன்னைப் பற்றிய குற்றச் சாட்டுகளை மறுத்து, தன் 'கற்பை', பெருமையை நிலை நிறுத்தும். இதற்காக எத்தகைய சாதுரியத்தையும் சாகசத்

தையும் மேற்கொள்ளும். அதிகாரம், பணம் ஆகிய வற்றை நோக்கமாகக் கொண்டவர்களின் வெறித்தன மான அரசியல் இது. இந்தக் கட்சி அரசியல் மக்களை, வாழ்க்கையை, சுதந்திரத்தை, நற்குணங்களை அறிவை நாசமாக்கும். கட்சி அரசியலின் போக்கில் எழுதப்படுவது நாவல் அல்ல. நாவல் இன்னும் ஆழ்ந்த தளங்களில் இயங்க வேண்டும். மக்களின் வாழ்க்கையை, சுதந் திரத்தை எத்தகைய ஆதிக்கச் சக்திகள் அழிக்கின்றன என் பதைச் சொல்லவேண்டும். தலைவர்களும் தொண்டர் களும் ஏன் எளியவர்களாகச் சிறுமைப்பட்டுப் போகிறார் கள் என்பதைச் சொல்லவேண்டும். காமமும், பணமும், சதியும் இவர்களை ஏன் வளைத்துக்கொண்டன என்பதைச் சொல்லவேண்டும். கட்சி அரசியல், இறுதியில் யாருக்குச் சேவை செய்கிறது என்பதைச் சொல்லவேண்டும். அதி காரத்திற்கான இந்த அரசியல், வாசகர்களை எப்படித் தன் ஆளுகைக்கு உட்படுத்தி நாசமாக்குகிறது என்பதைச் சொல்லவேண்டும். 'தராசு' தனமாக எழுதுவது, அரசி யல் நாவல் அல்ல. வணிகக் கலாச்சாரத்திற்கு ஒத்தியங்கு வது கலையை, வாழ்வை அழிக்கக் கூடியது.

## சின்னப்பபாரதி 15

தனுஷ்கோண ராமசாமியின் தோழர் என்ற நூலை ஒரு நாவலாக நாம் பார்க்கவேண்டியதில்லை. நாவல் வடிவில் எழுதப்பட்ட ஒரு பயண நூல் அல்லது கேள்வி பதில் பாடநூல். இடையில் கொஞ்சம் அருவருப்பான காதல். ஆகவே இந்நூலை நாம் ஒதுக்கிவிடலாம்.

கட்சி வட்டாரத்தவரான சின்னப்பபாரதியின் சங்கம் குறிப்பிடத்தக்க நாவல். கொல்லிமலையைச் சேர்ந்த மலைவாழ் மக்களின் வாழ்க்கையை இந்நாவல் சித்தரிக்

கிறது. மலைவாழ் மக்கள், உழவுத்தொழில், பன்றி வளர்ப்பு, திருமணம் முதலிய சடங்குகள், சமூகக் கட்டுப்பாட்டிலிருந்து விலகும்பொழுது அப்படி விலகுபவர்களுக்கு சமூகம் தரும் தண்டனைகள், காதல் ஆகியவற்றை அழகுபட விவரிக்கிறது இந்நாவல்.

கொல்லிமலையின் இயற்கை அழகு கவிதைப்பாங்கில் சொல்லப்படுகிறது. மலைவாழ் மக்களின் சமூகத்திற்குள் வந்து சேர்ந்த கந்துவட்டிக்காரரின் குரூரம் நம்மை அதிர்ச்சிக்குள்ளாக்குகிறது. வட்டி செலுத்தவில்லை என்றால் கடன் வாங்கியவனின் மனைவியை கந்து வட்டிக்காரன் தன்னோடு இழுத்துச் செல்கிறான். அப்புறம் மாட்டுக்கடன், விவசாயத்திற்கான பொருட்கள் கடன்

இந்த சமூகத்திற்குள் வந்த அரசு அதிகாரிகள் வனத்துறை அதிகாரிகள் காலங்காலமாக உழுது பயிரிட்டு வாழும் இவர்கள் நிலத்தை தமது என உரிமை கொண்டாடி மக்களை நிலத்திலிருந்து வெளியேற்றுகின்றனர். மக்கள் தம் பண்டங்களை கீழே நாட்டில் நடைபெறும் சந்தைக்கு எடுத்துச் சென்று விற்பனை செய்யும்பொழுது, பண்டங்களின் விலையை வியாபாரிகள் குறைத்துவிடும் குரூரங்கள் நேர்கின்றன. இவ்வாறாக தொடர்ந்து மலைவாழ் மக்களின் வாழ்க்கைக்குள் ஊடுருவிச் சென்று, இவர்களின் வாழ்க்கை நிலவரங்களை அழிக்கும் முயற்சிகள் நாவலில் சொல்லப்படுகின்றன. இவற்றுக்கு எதிர் நிற்க முடியாமல், மலைவாழ் மக்கள் வாழ்க்கையில் ஏற்படும் அவலங்கள்— இவற்றை எல்லாம் சிறப்பாகச் சித்தரிக்கிறார் சின்னப்ப பாரதி.

காலம் காலமாக தம் சமூகம் கட்டிக் காத்து வரும் அறநெறி சிதைவதைக் கண்டு அதிர்ந்து போகின்றனர் வயது முதிர்ந்தவர்கள். இவர்களின் அவலம் கொடுமையானது. இவைகளெல்லாம் நாவலின் ஒரு பகுதி என்று சொல்லலாம்.

நாவலின் இன்னொரு பகுதி இந்த மலைவாழ் மக்க ளுக்குள் ஏற்படும் சுரண்டல் பற்றிய உணர்வு-இதை உணர்த்தும் முறையில் கட்சிக்காரர் வருகை, மலைவாழ் இளைஞர்களின் ஆதரவு, தலைவர்களின்பெருமை பேசுதல், தலைவர்கள் என்ன சொன்னாலும் கட்டுப்படுதல், தீவிர மாக இயங்கவேண்டிய தருணங்களில் இளைஞர்களின் தீவிரம் தகாது என்று, தம் கட்சி நெறி சொல்லி, இளைஞரை ஊர்வலம், உண்ணாவிரதம் என்று கட்சி அரசியலுக்குள் செலுத்துதல் - இந்த அம்சம் நாவலைச் சிதைக்கிறது. நாவலுக்குள் இயங்கும் கலையின் தர்க்கம் சிதைகிறது. கலையோடு வாழ்வும் இயக்கமும் அழிகின் றன. இவற்றோடு இன்னும் ஒன்று. அங்கங்கே பாலுணர் வுக்காட்சிகள், வர்ணணைகள் இவை எல்லாம் இந் நாவலின் தரத்தைப் பாதிக்கின்றன. ஆசிரியர் தானே தேடிக் கொண்ட சரிவு. இதற்குப் பெயர் கட்சி விசுவாசம் என்று அவர் கூறிக் கொள்ளலாம்.

## சு. சமுத்திரம் 16

சு. சமுத்திரத்தின் நாவல்கள் பல எண்பதுகளில் வெளி வந்துள்ளன. சமுத்திரம் முற்போக்கு முகாமுக்கு நெருங்கி வந்திருக்கிறார்.

இவரது நாவல்களில் கல்கி காலம் தொட்டு வருகிற கதாநாயகன், கதாநாயகி தவறாமல் வருகிறார்கள். இவர்கள் உரத்துப் பேசுகிறார்கள். கடும் விமர்சனங்களை முன் வைக்கிறார்கள். தீவிரமாகச் செயல்படுகிறார்கள். மேடை நாடகப் பாணியில் சமுத்திரத்தின் நாவல்கள் கதை அமைப்பைக் கொண்டிருக்கின்றன. மனிதர்களின் ஒற்றைப் பரிமாணங்கள் மட்டும் நம்முன் நிறுத்தப்படும் இவரது நாவல்களில் ஆவேசம், மிகை உணர்ச்சி, தலைவன் தலை

விக்கிடையில் காதல் ஆகியவை தவறாமல் இடம்பெறும். இவை நாவல் என்ற கலையைப் பாதிக்கும் அம்சங்கள்.

சமுத்திரம் சமூக மாற்றத்திற்கென நாவல் இலக்கியத்தைக் கருதுகிறார். சமூக நீதி பற்றி அக்கறையோடு எழுதுகிறார். குறிப்பாக பிற்பட்ட, தாழ்த்தப்பட்ட சாதிமக்களின் சார்பில் உரத்து குரல் கொடுக்கிறார். இந்த அம்சங்களைப் பொருத்தவரை, கல்கியைக் காட்டிலும் நா.பா., அகிலன் ஆகியவர்களின் பாதிப்பை சமுத்திரம் கொண்டிருக்கிறார். **ஒரு கோட்டுக்கு வெளியே, ஊருக்குள் ஒரு புரட்சி** ஆகிய இவரது நாவல்கள் தமிழில் தலித் இலக்கியம் என்று மதிப்பிடத்தக்கவை.

தேவி இதழில் தொடர் கதைகளாக இவரது நாவல்கள் வெளிவந்தபோது, பல நூறு ஆயிரம் வாசகர்களின் ஆதரவைப் பெற்றதை நாம் ஒதுக்குவதற்கில்லை. நம் சமூகச் சூழலில் எத்தனையோ வகைகளில் ஒடுக்கப்பட்ட உணர்வுகளைக் கொண்ட வாசகர்கள், சமுத்திரத்தின் கதைகளை ஒரு மாற்றீடாகக் கருதி ரசித்துப் படிக்கத்தான் செய்வார்கள். நம் சமூகத்தில் நிலவும் அடக்குமுறைகளையும், ஆதிக்கத்தையும் இவற்றுக்கு எதிரான போர்க்குரலையும், போராட்டங்களையும் சமுத்திரம் தன் நாவலில் தவறாமல் சித்தரிக்கிறார்.

வண்ணாரப்பேட்டையில் வரிசை வீடுகளில் வாழும் ஏழைக் குடிகளை வீட்டுக்காரி வெளியேற்ற முனைகிற பொழுது அவளுக்கு ஆதரவாக வந்த காவல்துறையை கதிகலங்கச் செய்கிறாள் மல்லிகா (வளர்ப்பு மகள்)

தன் மனைவி மணிமேகலையிடம் தொழுநோயின் அறிகுறிகள் கண்டவுடன் அவளை விலக்கி வைத்து, அவள் உடைமைகளைப் பறித்துக்கொள்ள நினைக்கும் அவள் கணவன் ஜெயராஜுக்கு எதிராக நாவலின் இறுதியில் தொழுநோயிலிருந்து விடுதலை பெற்ற மணிமேகலை

தீவிரமாகப் போராடி தன் உடைமைகளையும் உரிமைகளையும் மீட்டுக் கொள்கிறாள் (இல்லங்தோறும் இதயங்கள்).

தான் செய்த ஊழல்களை எதிர்த்த தொழிலாளியும் அவன் மனைவியும் சாவதற்கு காரணமாக இருந்த காண்ட்ராக்டரை எதிர்த்துப் போராடுவதற்காக சிவன் கோவில் சாமியார் இராமையா கிளம்புகிறார் (புதிய திரிபுரங்கள்).

ஊரில் பெரிய மனிதனான ராசலிங்கத்தின் மகள், வினைதீர்த்தான் என்ற அவள் காதலனோடு ஓடியதற்கு உதவியாக இருந்தார்கள் என்ற முறையில், வயதான மாடக்கண்ணுவையும், அவர் மகள் கலாவதியையும் குரூரமான சித்திரவதைகளுக்கு ராசலிங்கம் உட்படுத்தினான். நிர்வாணப்படுத்தப்பட்டு உடம்பின் பல இடங்களிலும் சூடுபோடப்பட்டு, மனம் சிதைந்து பைத்தியமாகி விட்ட கலாவதியைத் தோளில் போட்டுக்கொண்டு காவல் நிலையத்தின் முன் நீதி கேட்கிறார் பேராசிரியர் தமிழரசி. (நெருப்புத் தடயங்கள்).

கல்லூரியிலும் பள்ளியிலும் நிர்வாகம் செய்யும் ஊழலுக்கெதிரான போராட்டங்கள் சில நாவல்களில் இடம்பெறுகின்றன. (வேள்வித் தீ)

கல்வராயன் மலைப்பகுதியில் வாழும் மலைவாழ் மக்களை லம்பாடிகளை முன்னர் ஜாகிர்தார் கொடுமைப் படுத்தினார். இப்பொழுது அரசுத்துறை அதிகாரிகள் கொடுமைப்படுத்துகிறார்கள். இவர்களை எதிர்த்து போராடுகிறான் தீர்த்தன். (உயரத்தின் தாழ்வுகள்)

'ஊருக்குள் ஒரு புரட்சி' என்ற நாவலின் இறுதியில் சின்னான் தலைமையில் கிராமத்தின் 'தலித்' மக்களும் பிற்படுத்தப்பட்டவர்களும் கிளர்ந்தெழுகின்றனர். சாதி

யில்லை என்ற பிரகடனத்தோடு கிராமத்தில் அதுநாள் வரை தொடர்ந்து, ஊழல்களுக்கும் அடக்குமுறைக்கும் காரணமாக இருந்த கூட்டுறவுச் சங்கத்தலைவர் பஞ்சாயத்துத்தலைவர், முன்சீப், மணியகாரர் ஆகியவர்களிடமிருந்து தம் உடைமைகளையும் உரிமைகளையும் மீட்டுக் கொள்கின்றனர். தம் பெயரில் வாங்கி, அப்புறம் தம்மிடமிருந்து அகப்படுத்திக் கொண்ட பசுமாடுகளை மீட்கின்றனர். பினாமி நிலங்களை மீட்கின்றனர். லாரி ஏறி செத்தவர்களுக்கு, அதுவரை மறுக்கப்பட்ட இழப்பீடுகளை வசூலிக்கின்றனர். இறுதியாக காவல் துறையின் தாக்குதல்களை எதிர்க்கத் திரள்கின்றனர். இன்றைய சூழலில் கலையில் வெளிப்படுத்தப்படும் இந்த எதார்த்தம் வாசகர்களுக்கு உற்சாகத்தையும் ஊக்கத்தையும் தரக் கூடியது.

வாசகர்களின் சமூக உணர்வை மேம்படுத்தும் முறையில் நாவலில் அங்கங்கே அறிவு ரீதியான விவரங்களையும் விளக்கங்களையும் தருகிறார் சமுத்திரம் தொழுநோய் பற்றிய விவரங்களையும் மருத்துவத்தையும், செங்கற்பட்டு மருத்துவமனை பற்றியும் விவரிக்கிறார் ('இல்லந்தோறும் இதயங்கள்')

அலுவலக மேனேஜரை எதிர்க்கும் தருணத்தில் மெய்யப்பன் மனச்சிதைவுக்கு உள்ளாகிறான். இவனது மனச்சிதைவுக்கான காரணிகளை அவனது இளமைக்கால வாழ்விலிருந்தும், சாதிய அடக்குமுறையிலிருந்தும், இறுதியாக சமூகச் சூழலிலிருந்தும் விவரங்கள் தந்து விளக்குகிறார், மெய்யப்பனை குணப்படுத்துகிறார், டாக்டர் ரகுநாதன். இவர் மூலம் நடத்தை உளவியல் பற்றி சில விவரங்களைத் தருகிறார் ஆசிரியர். (வெளிச்சத்தை நோக்கி)

தீமையின் வடிவமாகிய முயலகனை தன் காலடியில் மிதித்து ஏறி ஆனந்த நடனமாடுகிறார் சாமியார்

இராமையா ('புதிய திரிபுரங்கள்'). இங்கு சமயத்திற்குள் இருந்து சமூகநீதியை மீட்டுக்கொள்ள முடியும் என்று நம்புகிற ஆசிரியரின் பார்வையை நாம் பாராட்டலாம். 'ஊருக்குள் ஒருபுரட்சி' 'புதிய திரிபுரங்கள்' ஆகிய இரண்டும் கூடியவரை நேர்த்தியாக எழுதப்பட்ட நாவல்கள்.

## கே. டேனியல் 17

எண்பதுகளில் வெளிவந்த கே. டானியலின் மூன்று நாவல்களான **அடிமைகள், கானல், தண்ணீர்** ஆகியவை இங்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

தமிழில் தலித் இலக்கியம் படைத்த சிறந்த நாவலாசிரியர் என்று டேனியலைக் கூறமுடியும். இவரது மார்க்சியப் பார்வையும் சாதியப் பார்வையும் முரண்படுவதாகத் தெரியவில்லை. மார்க்சியத்திற்குள் சாதியப் பார்வை ஒத்து இயங்குகிறது.

யாழ்ப்பாணத்தைச் சூழ உள்ள பல கிராமங்களில் சுமார் ஒரு நூற்றாண்டுகால வரலாற்றின் சில அழுத்தமான அம்சங்கள் இவரது நாவல்களில் இடம்பெறுகின்றன. யாழ்ப்பாணத்தில் முதல் ரயில் வருகை, தீப்பெட்டித்தொழிற்சாலை, கார் வருகை, அலோபதி மருத்துவம் ஆகிய விவரங்கள் நாவலில் சொல்லப்படுகின்றன. உயர்சாதி வேளாள நிலக்கிழார்களின் ஆதிக்கம், ஆடம்பரம், பெருமிதமான வாழ்வு, சின்னத்தனங்கள் சொல்லப்படுகின்றன. நளவர், பள்ளர், பறையர், கோவியர் என்ற தாழ்த்தப்பட்ட மக்கள், வேளாளர்களின் அடக்குமுறைக்கு ஆளானதையும், அடக்கப்பட்ட இந்த அடித்தள மக்களின் எதிர்ப்பையும் போராட்டங்களையும் டேனியல் விரிவாகச் சொல்லுகிறார். கிறித்துவப் பாதிரிமார் கிராமங்களுக்கு

வந்து, நிலக்கிழார்களுக்கு எதிராகப் போராடிய நளவர், பள்ளர் போன்ற சாதி மக்களுக்கு உதவி செய்ததையும், அவர்களுக்கு வேதம் கற்றுக் கொடுத்து, அவர்களைக் கிறித்தவராக்கியதையும் டேனியல் சொல்லுகிறார். நளவர் முதலிய தாழ்த்தப்பட்ட சாதியினருக்குள்ளும் ஏற்றத்தாழ்வுகள் செயல்படுவதையும், இவற்றைத் தம் ஆதிக்கத்திற்காக வேளாளர் பயன்படுத்திக் கொண்டதை யும் சொல்கிறார்.

திறமைமிக்க மருத்துவர்களாகிய பரியாரிகளுக்கும், மந்திரவாதிகளுக்கும் இவர்கள் - தாழ்த்தப்பட்டவர்களாக இருந்த போதிலும், வேறு வழியில்லாமல் உயர்சாதி வேளாளர்கள் இவர்களுக்கு அஞ்சி ஒடுங்கி இருந்ததைச் சொல்கிறார். நளவர் முதலிய சாதிப்பெண்களை வேளாளர் பாலியல் உறவுக்குப் பயன்படுத்திக் கொண்டனர். நயினாத்திகள் உடல் தினவுக்காகவும், மகப்பேற்றுக் காகவும் தாழ்த்தப்பட்ட சாதியினரைப் பயன்படுத்திக் கொண்டனர்.

கோயில்களில் கயிறு கட்டி ‘தலித்’ மக்களை உயர் சாதிக்காரர் ஒதுக்கி வைத்தனர். கயிற்றை அறுத்து இவர்கள் கலவரம் செய்தபோது இவர்களில் பலர் கொல்லப்பட்டார்கள். உயர்சாதியினர்க்கும், தலித் மக்க ளுக்கும் பகை முற்றிய காலங்களில் உழவுத்தொழிலி லிருந்து நளவர்களை வேளாளர் ஒதுக்கினர். வேளாளர் தோட்டங்களில் வேலை செய்வதை நளவர்களும் புறக் கணித்தனர். சில பருவங்களில் நிலங்கள் பாழாயின.

உழவுத்தொழிலிலிருந்து விடுபட்டு துறைமுக வேலை, மருத்துவமனைகளில் வேலை என்று இவர்கள் புறப்பட் டனர். கடற்கரையில் கடுமையான படகுத்துறை வேலை களில் சட்டம்பியரால் இவர்கள் அமர்த்தப்பட்டனர். கலவரம் எழுந்த காலங்களில் உயர்சாதியினர் தோட்டக் கிணறுகளில் தலித் மக்களுக்கு தண்ணீர் மறுக்கப்பட்டது.

தலித் மக்கள் தாமே தோண்டிய கிணற்றில் வேளாளர் நஞ்சைக் கலந்தனர்.

கோளியர், நளவர் முதலிய குடிமக்கள் வேளாளர் வீடுகளில் தலைமுறை தலைமுறையாக கொத்தடிமையாகக் கட்டுண்டு வாழ்ந்தனர். நயினாத்தியின் குழந்தைகளுக்கு இவர்கள் பால்கொடுத்து வளர்த்தனர். நயினாத்தி குழந்தைகளுக்குப் பால்கொடுக்கும் காலங்களில் இந்தப் பெண், தன் கணவனுடன் உடல் உறவு கொள்ளக்கூடாது. இதனால் கணவன், மனைவிக்கிடையில் சந்தேகமும், தற்கொலையும் அல்லது கொலையும் நடைபெற்றன. ஊரில் பெரிய மனிதராகிய வேளாளர், படியில் தவிடு நிறைத்து அனுப்பினால், அதைப் பெற்றுக் கொள்ள வேண்டிய பெண், இரவில் இவன் இருப்பிடத்துக்குப் போய்ச் சேரவேண்டும்.

சந்தைக் கடைகளில் தாழ்சாதி மக்களுக்கு தண்டனை தரும் முறை குரூரமானது. நெற்றியில் ஒரு கல் அல்லது காசை வைத்துக்கொண்டு முழங்தாளில் நெடுநேரம் நிற்கவேண்டும். காசு விழக்கூடாது. தாழ்ந்த சாதிப் பையயன் வேளாளர்களின் தாமரைக்குளங்களில் குளிக்கக் கூடாது. குளிக்க வைத்தால் பையனின் தாயை நயினாத்திகள் அடித்து சேலையை உருவிக் கொள்வார்கள்.

இம்மாதிரி கொடுமைகள் ஒரு நூற்றாண்டுக்கால அளவில் நடைபெற்றதை டேனியல் நுட்பமாகவும் விரிவாகவும் தன் நாவல்களில் சித்தரிக்கிறார்.

தலித் மக்கள் கடுமையாக உழைக்கிறார்கள். எனினும் கேவலப்படுத்தப்படுகிறார்கள். இந்தச் சூழலில் இவர்கள் போராடுகிறார்கள். சிலசமயம் வேளாளர்களைக் கொலை செய்கிறார்கள். அடித்து நொறுக்குகிறார்கள்.

இவை மட்டுமல்ல, வேளாளர் குடும்பத்தலைவன் செய்த விளையாட்டுக்கள், வம்புகள், வழக்குகள், காரணமாகத் தன் சொந்த வீட்டையும் இழக்கக்கூடிய தருணத்தில் நளவன் (கந்தன்) ஏலத்தில் வீட்டை எடுத்து, வீட்டுக்கு வாரிசு என எஞ்சியிருக்கும் கண்ணம்மாவிடம் சேர்க்கிறான். செல்லி, நயினாத்தியின் குழந்தைக்குப் பால் கொடுத்து தன் கணவன் சந்தேகத்திற்குள்ளாகி, அப்புறம் கணவனையும் பறிகொடுத்து, கிணற்றில் விழுந்து சாகிறாள். கணவனிடம் உண்மை சொல்ல முடியாத நிலையில் இவர்கள் இப்படிச் செத்து, நயினார் குடும்பங்களை வாழ்விக்கிறார்கள் ('அடிமைகள்').

உயர்சாதி நிலக்கிழார்களுக்கிடையில் கடுமையான போட்டியும் சண்டையும் நிலவுவதை டேனியல் சொல்லுகிறார். பல்லக்குத்தம்பி, கயிலாயரைக் கடுமையாக அவமானப்படுத்துகிறான். சூரியர், சந்திரரின் மனைவியோடு கொண்ட உறவுக்காகக் கொல்லப்படுகிறார். கோயில் திருவிழாக்காலங்களில் தமக்குள் யார் பெரியவர் என்பதைத் தீர்மானிப்பதற்காக இவர்கள் தேங்காயடிப் போர், சேவலடி போன்ற போட்டிகளில் ஈடுபடுகிறார்கள். போட்டிகளுக்குப் பயன்படுத்தப்படும் மக்கள் மீண்டும் தலித் மக்கள்தான். இவ்வாறு நிகழ்ச்சிகளைச் சொல்லுகிறது 'அடிமைகள்' நாவல்.

தம் கட்டளைக்குப் பணிய மறுக்கும் நளவர்களின் கலட்டிகளை தீ வைத்துக் கொளுத்துகிறார்கள். தம் அடியாட்களைப் பயன்படுத்தி அவர்களைக் கொல்கிறார்கள். இவர்களுக்கிடையிலும் பூக்கண்டர், நெஞ்சுசுப்பர், மணியகாரர் போன்ற சில நல்ல மனிதர்கள் செயல்படுகிறார்கள். கிறித்தவராக நளவர் முதலிய சாதியினர் மாறியபொழுதும், சாதிவேறுபாடு கோயிலுக்குள் அழிவதில்லை. ஞானமுத்து சாமியார் போன்றவர்கள் அதைத் தடுக்க இயலாமல் தவிக்கிறார்கள் ('கானல்)'.

பம்பிடிசிங்கி, தாழ் சாதி மக்களுக்கு கிணறு தோண்டு வதற்காகத் தன் நிலத்தைக் கொடுக்கிறார்கள். நளவனும் பள்ளனும் தமக்குள் வேற்றுமை துறந்து ஒத்துழைக் கின்றனர். தமக்கான பொதுக்கிணறு வெட்டுவதற்காகப் பல ஊர்களிலிருந்து நளவர் முதலியவர் திரள்கின்றனர் ('தண்ணீர்').

டேனியல் நாவல்களில் 'தலித்' மக்களின் கடும் உழைப்பு, தியாக உணர்வு முதலிய நற்குணங்கள் வெளிப்படுகின்றன. இவர்கள் தான் உயர் சமூகத்தினரான வேளாளர்களைத் தாங்குபவர்கள் என்பது நன்றாகத் தெரி கிறது. உயர்சாதியினரின் குடும்பங்களுக்குள் ஆண் பெண் உறவுகள் கலகலத்துக் கிடக்கின்றன. ஆணின் அதிகாரம், பெண்களால் சகித்துக்கொள்ள முடிவதில்லை. பெண்கள், தேவைப்படும் பொழுதெல்லாம் கணவரை ஏமாற்று கின்றனர். விதானையாரின் அதிகாரத்தை நயினார்கள் தமக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். சில சமயம் பறங்கி அதிகாரிகள் தலையிடுகிறபோது இவர்கள் அகப்பட்டுக் கொள்கிறார்கள். சிறைக்குச் செல்வதைத் தவிர்க்க முயற்சி செய்கிறார்கள். மூடநம்பிக்கைகளில் இவர்கள் அஞ்சி அஞ்சிச் சாகிறார்கள். நளத்திப் பெண் ணுடன் கொண்ட உறவில் அவள் கருவுற்று, பின்னர் இறக்க நேர்ந்தால் நயினார் கதிகலங்கிப் போகிறார். அவள் வயிற்றுப் பிள்ளையை இறக்கித்தான் அவளைப் புதைக்க வேண்டும். இல்லாவிட்டால் நயினார்க்கு சாவு வரும். இப்படி அஞ்சி உடல்நோய்க்கு ஆளாகி பல இடங் களில் வைத்தியம் பார்த்து நோய் தீராமல் வருந்தி நயினார் சாகிறார் ('அடிமைகள்').

இவ்வாறெல்லாம் டேனியலின் நாவல்கள் நமக்குச் சொல்லுகின்றன. கூடியவரை இவை வரலாற்று விவரங்கள் என்று வைத்துக்கொள்ளலாம். இலக்கியத் தேவைக்காக அங்கங்கே சில புனைவுகள் இருக்கத்தான்

செய்யும். நளவர் முதலிய 'தலித்' மக்களின் உழைப்பு, போராட்டம் முதலிய உயர்குணங்களைச் சொல்லி நாவல் களிலும் இவர்களைத் தலைமக்கள் ஆக்குகிறார்.

மாந்திரீகத்தை அறிவார்ந்த முறையில் டேனியல் விளக்கவில்லை. கிணறு வெட்டும்பொழுது, பம்பிடி சிங்கி, மாதனுக்குள் இயல்பாக தெய்வமாகத் தெரிவதை உருக்க மாகச் சொல்லுகிறார். அவரது முற்போக்குப் பார்வை இதனால் களங்கப்படவில்லை.

ஞானமுத்து சாமியாரின் உண்மையான மனத்தடு மாற்றத்தைச் சொல்லும் பொழுது, குறிப்பிட்ட வரலாற்றுச் சூழலில் செயல்படும் முரணியலுக்குள் சாமியார் அகப் பட்டிருப்பதை டேனியல் நுட்பமாகச் சொல்லுகிறார். சாமியாரை வஞ்சகர் என்று தூற்றவில்லை. வேறு வழி யில்லாமல் சட்டாம்பியரின் கடும் உழைப்புக்கு நளவர் இடம் கொடுக்கத்தான் வேண்டும் ('கானல்').

எலத்திற்கு வரும் நயினார் வீட்டை கந்தன் எலத்தில் எடுத்து நயினார் வாரிசுக்குத் தரலாமா என்று டேனியல் தயங்கவில்லை. செல்லி, நயினாத்தியின் குழந்தைக்குப் பால் தருவதன் மூலம் தனக்கு நேரும் அழிவைத் தடுத்துக் கொள்ளக்கூடாதா என்று டேனியல் சிந்திக்கவில்லை. சின்னப்பன் தடுத்தும் கந்தன் தன் தியாக நெறியிலேயே செல்கிறான். இம்மாதிரி இடங்களில் வர்க்கப் பார்வை என்ற பெயரில் டேனியல் வக்கரித்துப் போகவில்லை.

இவரது மனித நேயம் உண்மையில் ஆழமானதுதான். தலித் மக்கள் தம் உழைப்பையும் உயிரையும் கொடுத்து இந்தச் சமூகத்தைத் தாங்குகிறார்கள். இதை டேனியல் சிறப்பாகச் செய்திருக்கிறார். இதன் மூலம் அவரது அரிய பணி நமக்குப் புரிகிறது.

'கானல்' 'தண்ணீர்' ஆகிய நாவல்களைக் காட்டிலும் 'அடிமைகள்' நாவல் நேர்த்தி மிக்கதாக உருவாகியிருக்கிறது. யாழ்ப்பாணத்து மக்களின் மொழி, உணவு, உடை முதலிய பழக்கங்கள், சாமி, சடங்குமுறை, கோயில், திருவிழா நிகழ்ச்சிகள், உயர்சாதி மக்களின் கோச்சு வண்டி, வீட்டமைப்பு, தமிழ் மக்களின் வீடு, உணவுப் பழக்க வழக்கங்கள், மந்திரவாதிகள், பரியாரிகள் யாழ்ப்பாண நகரம் முதலியவை டேனியலின் நாவல்களில் நுட்பமாகப் பதிவு பெற்றுள்ளன. இவை வரலாற்றியல், மானுடவியல் ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்படும்.

நாவல்களில் மனிதர்கள், டேனியலின் கருத்துக்களுக்குத் தரப்படும் உருவங்களாக இல்லாமல், இயல்பாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறார்கள். ஒரு நாவலாசிரியர் என்ற முறையிலும் ஒரு திறனாய்வாளர் என்ற முறையிலும் தன் படைப்புகள் பற்றி தேவையான விவரங்களையும், தன் படைப்புகள் மீது எழுந்த விமர்சனங்களுக்குத் தேவையான பதிலுரைகளையும் தன் நாவல் முன்னுரைகளில் டேனியல் விரிவாகவும் தெளிவாகவும் தந்துள்ளார். தலித் மக்கள் சார்பில் இவர் உறுதியாக நிற்பதை இவரது நாவல்கள் தெளிவாகப் புலப்படுத்துகின்றன.

தலித் மக்களை தன் நாவல்களின் நாயகர்களாக இவர் சித்தரிப்பதற்கான நியாயங்களைத் தன் நாவல்களில் சிறப்பாகவே சொல்லுகிறார். நாவல்களை வரலாற்று ஆவணமாக உருவாக்கியிருக்கும் பாங்கில், டேனியலின் சாதனையை நாம் பெரிதும் போற்றலாம். தமிழ்த் தேசிய இனத்தின் விடுதலை, வரலாற்றின் முன்னணிக்கு வந்த கால நிலைமைகளிலும், முன்னைய வரலாற்றுச் சூழலில் ஊன்றி நின்று, முன்னைய வரலாற்றின் சிக்கலான எதிர்முறைப் போக்குகளைப் பற்றிய எச்சரிக்கை உணர்வை நமக்குள் நிலை நிறுத்துகிறார். தலித் மக்களின் சாதி உணர்வு, வரலாற்றின் வளர்ச்சிக்குத் தடையாக

இருக்கப் போவதில்லை. சாதிப்பகை வளர்த்து இவர்கள் சாதிப்பதற்கு எதுவுமில்லை. சாதிப் பகையுணர்வு இவர்களின் இயல்பாகவும் இல்லை. உயர் சாதியினரின் சாதிய உணர்வு, பல வகைகளிலும் ஆபத்தானது என்பதில் ஐயமில்லை. டேனியலின் எதிர்கால நோக்கம் சோசலிசம். இதற்கான தூண்டுதல் டேனியலின் நாவல்கள்.

## மு. கருணாநிதி 18

எண்பதுகளில் எழுதப்பட்ட இரண்டுவரலாற்று நாவல்களை இங்கு பார்க்கலாம். கலைஞர் மு. கருணாநிதி எழுதிய தென்பாண்டிச்சிங்கம், சுஜாதாவின் இரத்தம் ஒரே நிறம் ஆகிய இரண்டு நாவல்களையும் வரலாற்று நாவல்களென பலர் கருதலாம். இரண்டும் ஆங்கிலேயரின் கம்பெனி ஆட்சிக் காலத்தைப் பின்புலமாகக் கொண்டவை. சுஜாதாவின் நாவலில், வரலாற்றுச் செய்திகள் கொஞ்சம் அதிகம்.

இவர்களின் கதை அமைப்பில் புனைவுகளே - அதாவது கற்பனையில் புனைந்து கொண்ட ஒரு கதையே முதன்மையாகிறது. சதைத் திரட்சி போல இந்தக் கதைத் திரட்சி அமைகிறது. கல்கி காலம் முதல் வரலாற்று நாவல்களென எழுதப்படுவனவற்றுள் காதல், வீர சாகசங்கள் வாசகர்களுக்கான கவர்ச்சியைத் தருபவை. இந்த இலக்கணத்திற்கு கருணாநிதியும் சுஜாதாவும் குறை வைக்கவில்லை. மேற்கொண்டு என்ன நிகழும் என்ற கதைப் பசியோடு, சுவை உணர்வை மிகைப்படுத்திக் கொண்டு, வாசகர்கள் கதை நிகழ்ச்சிகளுக்குள் தொடரலாம். கதையில் பின்னல்கள் அங்கங்கே முடிச்சுகளோடு தொடர்ந்து கொண்டே இருக்கும்.

கருணாநிதியின் பாலுறவுக் காட்சி, மெல்ல மெல்ல உடலில் ஏறி தீ மூட்டும். சுஜாதாவின் காட்சி, பட்டனை அழுத்தியவுடன் உடலில் மின்சாரம் பாய்கிற மாதிரி, ஒரு நொடிக்குள் உடம்பில் பாய்ந்து சூடேற்றும்.

சிவகெங்கைச் சீமை, மருதுபாண்டியர் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடி வரும் இறுதிக் காலம். தென்பாண்டி நாட்டில் இருந்த பாகனேரி, பட்டமங்கலம் ஆகிய இரண்டு அம்பலங்களுக்கிடையில் கடும் பகை. இவர்களில் சிலர் ஆங்கிலேயத் தளபதி அக்னியூவின் படையை முறியடிக்கும் வகையில் மறைவாகச் செயல்படுகின்றனர். இவர்களை அழித்துவிடவேண்டுமென்று அக்னியூ செய்யும் சூழ்ச்சிக்கும் இடம் தருகிறான் உறங்காப்புலி. இரு அம்பலங்களுக்கிடையில் பகை ஏற்படுத்துகிறான். பாகனேரி சகோதரர்களின் தங்கை கல்யாணி. பட்டமங்கலம் சகோதரர்களின் தம்பி வைரமுத்தன், இவள் கணவன். இடையில் ஜல்லிக்காளையோடு போர். அப்புறம் வாள் வீச்சில் வல்லராயனின் கொண்டை கத்திரிக்கப்படுகிறது. பாழ்மண்டபத்தில் சதி.

சரித்திரக் கதைக்கு எவையெல்லாம் தேவையோ அவை தொடர்கின்றன. அங்கங்கே சில புதுமைகளோடு- தமிழினத்தின் ஒற்றுமை, பண்பாடு குறித்து வீரஆவேசம். பகைவரை மன்னிக்கும் தமிழ்ப் பண்பாடு. சதைக்கு விலை, இப்பொழுது அதிகம். அதுபோல இக்கதைக்கு ரூபாய். இலட்சம் பரிசு. தமிழ்ப் பல்கலைக்கழகமும், துணைவேந்தரும், தேர்வுக்குழுவினரும் தாமே விரும்பி முகத்தில் தார் பூசிக்கொண்ட அலங்கோலத்தை என்னவென்று சொல்வது? தமிழைக் காட்டிலும், இலக்கியத்தைக் காட்டிலும் இவர்களுக்கு தம் வாழ்க்கை பெரியது.

## சுஜாதா 19

சுஜாதாவின் ரத்தம் ஒரே நிறம் நாவல் 1857 விடுதலைப் போராட்டத்தைப் பின்புலமாகக் கொண்டது. சுஜாதாவுக்கு இது விடுதலைப் போராட்டமல்ல. ஆங்கிலேயர் வர்ணித்தபடியே சிப்பாய்க் கலகம்.

வரலாற்று நோக்கில் பலவற்றைப் புரட்டி வாசகர்கள் முன்னிலையில் பட்டியல் போடும் சுஜாதா, சாவர்க்கர், ஜோஷி, பேராசிரியர் தீட்சித் முதலியவர்களின் நூல்களைப் பார்க்கவில்லை. இந்நாவலில்வரும் நானாசாகிப், தாந்தியா தோபே ஆகியவர்கள்-சிப்பாய்கள் என்று சொல்லப்பட்ட நிலச்சுவான்தாரர்களுக்கு எதிராக ஆத்திரம் கொண்ட உழவர் படையின் தலைவர்கள் என முன் நிறுத்தப்பட்டவர்கள். சுஜாதாவுக்கு இப்படியில்லை. தமிழ்நாட்டில் கலகம் எதுவுமில்லை. ஆகவே கதையைத் தமிழ்நாட்டிலிருந்து வடநாட்டுக்கு நகர்த்துகிறார்.

கர்னல் நீல் கொடுமைக்காரன் என வரலாற்றில் சித்தரிக்கப்படுபவன். அயோத்தியிலும் கான்பூரிலும் ஆயிரக்கணக்கில் படுகொலை செய்த வெறியன். இறைவன் தனக்கிட்ட ஆணையை, தான் நிறைவேற்றி வருவதாக இவன் நம்பினான். ஆச்சரியமான அதிர்ச்சி தருகிற உண்மை. இந்த உண்மைத்திரையைக் கிழித்துப்பார்த்தால் இறைவனுக்குள்ளே பிசாசு - ஆங்கில ஆதிக்கப் பிசாசு - இயங்குவது தெரிந்திருக்கும்.

வட இந்தியப் போர்களையும், கான்பூரில் நடைபெற்ற கலவரங்களையும், படுகொலைகளையும் சுஜாதா விவரிக்கும் பாங்கு நம்மைக் கூர்மையாகத் தாக்குகிறது. சென்

னையில் மக்கின்சி என்ற படைத்தலைவன் திமிர் பிடித்தவன். இவனது குரூரம் சில காட்சிகளில் கூர்மையாகச் சித்திரிக்கப்படுகிறது.

இனித்தான் கதைக்கான கற்பனைத் திரட்சிகள். தன் தந்தையின் சாவுக்காக மக்கின்சியைப் பழிவாங்கும் நோக்கத்தோடு, மக்கின்சியைத் தொடர்ந்து செல்லும் முத்துக்குமரன், ஒவ்வொரு முறையும் இவன் வாள்வீச்சுக்கு மக்கின்சி தப்புவதால் கதை வடஇந்தியாவில் சுற்றுகிறது. கதையில் ஒரு நாடோடிக்கூட்டம். இவர்களில் ஓர் அழகி, பூஞ்சோலை. அற்புதங்கள் செய்யும் பைராகி. பூஞ்சோலையின் காதலுக்கு முத்துக்குமரன் இடம்தரவில்லை. இறுதியில் மக்கின்சியும் முத்துக்குமரனும் ஒருவரை ஒருவர் வாள்வீசிக் கொன்றனர். இருவர் ரத்தமும் ஒரே நிறம்.

ஆஷ்லி என்ற இன்னொரு படைத்தலைவன். அவன் நேர்மையானவன். ஆங்கிலேயர்களுக்கிடையில் இத்தகையவர்களும் உண்டு என்பதற்கான சாட்சியம். முத்துக்குமரன் வழக்கமான வரலாற்று நாவல்களில் காணப்படும் வீரன். வரலாற்று நாவல்களுக்குத் தேவையான விடாப்பிடியான காதலி பூஞ்சோலை. மர்ம மனிதன் பைராகி. கொலைக்காட்சிகள், நெடுந்தொலைவுப் பயணங்கள், இவற்றில் சுஜாதா குறை வைக்கவில்லை.

எண்பதுகளில் சமூக நாவல்கள் என்று சொல்லத்தக்க முறையில் சுஜாதாவின் கனவுத் தொழிற்சாலையும் பிரிவோம் சந்திப்போம் நாவலும் வெளிவந்துள்ளன.

கனவுத் தொழிற்சாலை, சினிமா பற்றிய நாவல். சினிமாத்துறையில் சம்பந்தப்பட்டுள்ள முதன்மை நடிகர், படத்தயாரிப்பாளர், பாடல் ஆசிரியர், துணை நடிகர்,

படத்தயாரிப்பாளருக்கு உதவியான ஏஜண்டுகள் ஆகிய வர்களை முதன்மைப்படுத்தி, இயக்குநர் முதலியவர்களை பின் நிலையில் வைத்து எழுதப்பட்ட நாவல். அருண், கிராமத்திலிருந்து சினிமாத் தொழிலுக்கு வந்தவன். இறுதிவரை தன் கிராமத்துக் கல்யாணியை அவனால் மறக்க இயலவில்லை. இப்படி அருணுக்கு கிராமத்தின் மேல் அல்லது காதலியின் மேல் பற்று.

பிரேமலதா தெலுங்கு நடிகை. சாமர்த்தியம் தெரிந் தவள். இவள் அருணை வளைத்துக்கொள்கிறாள். தன் முன்னைய வாழ்க்கை பற்றி அருண் கேள்வி கேட்கக் கூடாது. தமிழ் நடிகை நல்லவள். தெலுங்கு நடிகை மோசமானவள்.

எம்.ஜி.ஆர்.பாணியில் படம் தயாரிப்பவர் லட்சுமணன். சென்சாரில் வெட்டப்பட்ட காட்சியைச் சேர்த்ததற்காக சிறை சென்று திரும்புகிறார். திரும்பி, பின் படவுலகில் இது இயல்பு என்று பேசுகிறார்.

அருமைராசன் கவிஞன். பாடல் எழுத பெங்களூரி லிருந்து வந்து கிட்டு என்ற ஏஜெண்டிடம் அகப்பட்டு, நைந்து கந்தலாகி, அப்புறம் திடீரென்று ஒரு நாள் பாடல் எழுதி புகழ் வெளிச்சத்தில் இவன் திளைக் கிறான்.

வாசகர்களைப் பெரிதும் கவரும் துணை நடிகை மனோண்மணி. திறன் மிக்கவள். பலரால் ஏமாற்றப் பட்டு, இறுதியில் சேட்டிடம் தன் உடலை விற்று கிடைத்த பணத்தை வீட்டு வாடகைக்கென செலுத்தி, இரவு தற்கொலை செய்து கொள்கிறாள்.

இப்படி குறுக்கும் நெடுக்கும் செல்லும் பல கதைகள் இந்த நாவலில் உள்ளன. அருணின் செயலாளர் பாஸ்

கரன், கல்யாணியின் சகோதரன் சுந்தர் ஆகிய இருவரும் சுஜாதா மாதிரி அதிபுத்திசாலிகள். இடையிடையே மின் சாரம் பாய்ச்சும் செக்ஸ் காட்சிகள். இது கனவுத் தொழிற்சாலை.

நடிகர்களின் வாழ்க்கை அந்தரங்கங்கள், அதுபோல, படத்தயாரிப்பாளரின் சின்னத்தனங்கள், ஏஜெண்டுகளின் அக்கிரமங்கள் இம்மாதிரி விவரங்கள் அனேகமாக ஏற் கனவே வாசகர்களுக்குத் தெரிந்தவை தான். திரைப் படத் தொழிலைப் பற்றி எழுதப்படும் ஒரு சிறந்த நாவல் என்று இதனைச் சொல்வதற்கில்லை. ஓர் இயக் குநரை மையமாக்கி எழுதினால், நாவல் இன்னும் சிறப் படையலாம். தவிர, தொழில் பற்றிய சித்தரிப்புகள் ஒரு நாவலுக்கு போதுமானவையல்ல. வாழ்க்கையும் கலை யும் உரசிக்கொள்ளும் அல்லது முரண்படும் இடம்தான் நாவல் ஆக்கத்திற்குரியது. மனோண்மணியின் வாழ்க்கை, கலை அல்லது தொழிலோடு இவள் கொண்ட உறவு, இந்த நாவலில் அற்புதமான சித்தரிப்பைப் பெறுகிறது. அருமைராசனின் வறுமை ஒரு சீரழிவு. அருமைராசனின் கலை, நாவலில் வெளிப்படவில்லை. கிட்டுவின் சாமார்த் தியங்கள், ஓர் அயோக்கியனின் திறமைகள் பற்றிய அச்ச உணர்வை நமக்குள் பதிய வைக்கின்றன. பிரேம லதாவை வாசகர்களால் விரும்பவே இயலாது. நிறை மாத கர்ப்பினியாகிய கல்யாணி பற்றிய சித்தரிப்பு, பட்டினத்தார் பாடலைப் படிப்பதைப் போன்ற உணர்வை நமக்குள் ஏற்படுத்துகிறது. அருண் பாத்திரப்படைப்பு கமலஹாசனை மனத்தில் வைத்துப் படைத்தாக இருக்கக் கூடும். இதன் மூலம் நடிப்பின் நுணுக்கங்கள் பற்றிய அம்சங்கள் கூட வெளிப்படவில்லை. சுஜாதாவின் வாச கர்களைக் கவர்வதற்கான அம்சங்களுக்கு மேல், சில நல்ல அம்சங்கள் இருக்கின்றன என்பதால் இந்த நாவலை நாம் இரசிக்கிறோம்.

'பிரிவோம் சந்திப்போம்' என்ற நாவல் ஒரு தரமான சமூக நாவல். தொழில் நுட்பம் கற்ற இளைஞன் ரகுபதி. பெண் என்றால் கூச்சம் கொள்பவன். இவனை வைத்து காதல் கனவுகளை சொல்ல முடியும். மதுமிதா இறுதி வரை ஒரு குழந்தை. இவளை வைத்து எல்லாச் சூழ் நிலையிலும் பலரிடம் பதிந்துள்ள குழந்தைத் தனமான இரசனைகளைச் சொல்ல முடியும்.

இவளை வைத்து ஆண்கள் விளையாட முடியும். மதுமிதாவின் அப்பா கோபிநாத் பெரிய என்ஜினியர். திறமை மிகுந்த ரகுபதியை தனக்கு மருமகனாக்கிக் கொள்ள முடியும்.

இவனை விட இன்னொரு திறமைசாலி—வாழ்க்கைத் தரத்தில் உச்சத்தில் இருப்பவன்—அமெரிக்காவின் நாகரி கத்தை உள்வாங்கிக் கொண்டவன்— இராதாகிருஷ்ணன். எதையும் ஒரு சவாலாக எடுத்து வெற்றி கொண்ட பின், அதை உதாசீனப்படுத்தி விட்டு இன்னொரு சவால் தேடிச் செல்பவன்.

மதுமிதாவை இரகுபதியிடமிருந்து எளிதாகப் பிரித் துக் கொள்கிறான். அப்புறம் பாபநாசத்தை விட்டு அமெ ரிக்காவுக்கு காட்சி மாறுகிறது. எம்.பி.ஏ. படிக்க ரகுபதி அமெரிக்கா செல்ல வேண்டும். இப்படி நகர்த்தினால்தான் கதை.

ராதாகிருஷ்ணன் மதுமிதாவோடு தன் சவாலை நிறுத்திக் கொள்ளவில்லை. வயதான பின் மதுமிதா அவனுக்குத் துணையாக இருக்க முடியும். கதையில் மதுமிதாவை இரகுபதி சந்திக்க வேண்டும். சந்திக் கிறான்.

இடையில் ரத்னா என்ற புத்திசாலிப் பெண்ணோடு அவன் நட்பும், கொஞ்சம் காதலும் கொண்டான். அமெரிக்

காவில் பிறந்து வளர்ந்து, அமெரிக்காவின் அறிவு, வேகம், ஆகியவற்றை தனக்குள் விரித்துக் கொண்டாலும் இந்தியாதான் ரத்னாவை பெரிதும் கவர்கிறது. இவளுக் குள் இந்திய நாகரிகம் தன் கொடியை உயர்த்துகிறது. அமெரிக்கச் சூழலில் மதுமிதாவால் வாழமுடியாது. அமெரிக்க மனப்பான்மையும் இந்திய மனப்பான்மை யும் தமக்குள் ஒத்துப்போக இயலாது.

நாவலுக்குள் இன்னொரு கிளைக்கதை ரகுபதியின் அப்பாவின் கதை. இன்னொருவனால் வஞ்சிக்கப்பட்ட ஜெயந்தியை தன்னோடு வைத்துக்கொள்கிறார். ஊர்ப் பேச்சுக்களை ஓயச் செய்வதற்காக அவளை திருமணம் செய்து கொள்கிறார். எந்தச் சூழ்நிலையிலும் அதிர்ச்சி யோ வெறுப்போ கொள்ளாத மனிதர். இயல்பாக எதை யும் ஏற்றுக்கொள்பவர். ரகுபதியிடம் தன் நியாயங்களை இதமாக எடுத்துச் சொல்பவர். சுஜாதாவின் தந்தையார் பிம்பம் என்று முன்னுரை சொல்லுகிறது. அற்புதமான மனிதர். இராதாகிருஷ்ணனும் ரகுபதியின் அப்பாவும் பேசும் புத்திசாலித்தனமான நியாயங்கள் வாசகர் சிந்தனைக்குரியவை. ரகுபதியை வளர்க்க ரத்னாவால் முடியும். மதுமிதாவும் ரகுபதியும் காதல் கொள்ளலாம். ஒருவரை ஒருவர் வளர்க்க இயலாது.

அரபு நாட்டிலிருந்து ஒரு பெண் எழுதிய சோகக் கதையை சுஜாதா பின்னுரையில் குறிப்பிடுகிறார். ராதா கிருஷ்ணன் மாதிரி ஒரு கணவன் அந்தப் பெண்ணுக்கு. ராதாகிருஷ்ணனின் நியாயங்கள் நாவலில் வலுவோடு சொல்லப்பட்டிருக்கின்றன. இம்மாதிரி பெண்கள் துயரங்களைச் சுமந்து கொண்டுதான் வாழ வேண்டும். ஒரு மனைவி என்ற பிம்பத்தில் தன்னை முற்றாகப் பொருத்திக் கொள்வதில் உள்ள துன்பங்கள் இவை. வேறு சில அம்சங்களில் தன்னை உருவாக்கிக்கொண்டா லொழிய இத்துயரங்கள் தவிர்க்க இயலாதவை.

நாவல் நெடுகிலும் நளினமான வர்ணனைகள், அமெரிக்கா பற்றிய சித்தரிப்புகள் எல்லாமே சுஜாதா பாணியில். கோபிநாத் திமிர் பிடித்த ஒரு பணக்காரன். இப்படித்தான் செய்வான். ராதாகிருஷ்ணனும் அதே போல. வாழ்க்கையில் கீழ்த்தட்டுகளில் உள்ளவர்கள் இதனால் பாதிக்கப்படத்தான் செய்வர் என்ற ஓர் இழையும் நாவலுக்குள் சேர்ந்துள்ளது.

தமிழ்க் கதை அமெரிக்கச் சூழலுக்கு நகர்த்தப் பட்டிருக்கிறது. அமெரிக்காவின் பொருளியல் நாகரிகமும், இந்தியாவின் ஆன்மிக நாகரிகமும் ஒருகளத்தில் மோதிக்கொள்கின்றன. தன் தோல்வியின் மூலம் இந்திய நாகரிகம் வாசகருக்குள் வெற்றியை நிலை நாட்டிக் கொள்கிறது. சுஜாதா வாசகர்களை இப்படி நம்ப வைக்கலாம். சுஜாதா திறமை மிக்கவர் என்பதில் ஐயமில்லை.

## சுப்ரபாரதிமணியன் 20

சுப்ரபாரதிமணியனின் **மற்றும் சிலர்** நாவலை இங்கு குறிப்பிடலாம். மிதவையில் வரும் சண்முகம் போல இன்னொரு தனியன், 'மற்றும் சிலரில்' வரும் சுந்தர ராஜன்.

திருப்பூரில் வேலையில்லை. ஹைதராபாத் என்ற பெரிய நகரத்தில் கைத்தறித் துணியை கடனுக்கு விற்றுப் பிழைக்கிறான். இளமைக்கால உறவோடும், கலா சாரத்தோடும் இவனுக்கு தொடர்பு அற்றுப்போகிறது. தொழிலாளி வர்க்கப் படிப்பாளி நண்பன் வெங்கட் டோடு கொஞ்சம் நட்பு. சமைத்துப் போட, உடற்பசி தீர ஒரு தெலுங்குப் பெண் மனைவி. தெலுங்கான

போராட்டத்தின் போது குறுக்கே சென்ற இவனுக்கு முதுகில் பலமான தடியடி. குறைந்த அளவு தேவைகளைப் பெறுவதோடு, பெறுவதற்காகப் போராடுவதோடு, வாழ்க்கையை இவன் முடித்துக்கொள்ள வேண்டும். விபத்துக்கள் இவன் வாழ்க்கையை அழிக்கவும் கூடும்.

இனத்திலிருந்தும் நாட்டிலிருந்தும் துண்டிக்கப்பட்ட துயரத்திற்காக இவன் அழுவது இவனுக்கு தேவையில்லாத இலங்காரம். கூடியவரை அவலக்குரல் எழுப்பாமல், முற்போக்குவாதம் பேசாமல் இந்தத் தனியனின் கதையைச் சொல்லியிருக்கிறார் ஆசிரியர். தன்னை இப்படி ஆக்கியவர்கள் யார் என்று சிந்தித்து இவன் எதுவும் செய்ய முடியாது. நம்கால வாழ்க்கை இவ்வாறு பல கோடி பேருக்கு விதியென வாய்த்திருக்கிறது.

## எஸ். சங்கரநாராயணன் 21

எண்பதுகளில் எழுதிய புதிய நாவலாசிரியர்களில் சங்கரநாராயணன் தனித்தன்மை கொண்டவர். இவரது இரண்டு நாவல்களைப் பார்க்கலாம்.

**நந்தவனத்துப் பறவைகளில்** அரசு அலுவலகத்தில் வேலை செய்யும் பெருமாள்சாமியின் கதையைச் சொல்லுகிறார். பெருமாள்சாமி தைரியம் இல்லாதவன். நர்ஸ் பானுமதியோடு அவனுக்குத் திருமணம் ஆகிறது. மனைவி சொல்லிச் சொல்லி அவன் மனத்தில் உருவேற்றி இன்னொரு தொழிலில் ஈடுபடுத்துகிறாள்.

பெண்களைப் பற்றிய நாவல் இது என ஆசிரியர் முன்னுரையில் கூறுகிறார். பெருமாள்சாமியின் அம்மாவுக்கு முன்னால் அவன் அப்பா - லாரி டிரைவர்

வாயடைத்துக்கிடக்கிறார். தங்கை ரமணி சினிமாப் பிரியத்தில் ஆழ்ந்து கிடக்கிறாள். அக்காள் சௌந்திரம் புத்திசாலி. தன் அலுவலகத்தில் பணிபுரியும் ரத்னாபாய் தன் சுய அழகில் மயங்கிக் கிடப்பவள். மல்லிகா வீட்டில் அவள் பேச்சுக்கு எதிர்ப்பேச்சு எழாது எதிர்வீட்டு கிருஷ்ணாவேணி டீச்சர், கணவன் மீது செய்யும் அதிகாரம் சொல்லி முடியாது.

இந்த நந்தவனத்தில் யார் தான் பறவைகளென்று நமக்குத் தெரியவில்லை. பெண்கள் ஏன் இப்படி இருக்கிறார்கள் என்பதற்கான விவரங்களும் நாவலில் இல்லை.

மானுட சங்கமத்தில் பல முனைகளையும் இழுத்துக் கட்டுகிற மாதிரி தொடர்ச்சியான, உச்சக்கட்டத்தைக் கொண்டதாக கதை எதுவுமில்லை. ஒரு கிராமத்தின் கதை என்று இந்நாவலைச் சொல்லலாம்.

கதையில் வரும் மனிதர்கள் இருபதுக்கும் மேற்பட்டவர்கள். எவரும் தலை உயர்த்தி என்னைப் பார் என்று நிற்பதில்லை. ஒவ்வொருவரும் அவரவர்க்கான இயல்போடு வாழ்கிறார்கள். கதையின் நேர்த்தி வாசகர்களைப் பெரிதும் ஈர்க்கிறது.

பழனிக்குப் பக்கத்தில் ஒரு கிராமம். தேனாற்றில் வெள்ளம் வந்து ஊரை அழித்த கதையை சுப்புலட்சுமிப் பாட்டி, மீண்டும் மீண்டும் குழந்தைகளுக்கு சொல்கிறாள். ஆற்றங்கரையில் அர்த்தநாரீசுவரர் கோயில், தர்மகர்த்தா, அர்ச்சகர், நாதசுரம் வாசிப்பவர், தவுல் அடிப்பவர் என்று நாகரிகமான கோயில் இது. முட்புதர்களுக்கிடையில் இன்னொரு கோயில். உலகநாயகியம்மன் கோயில்.

நாதசுரம் வாசிக்கும் இராசமாணிக்கம் அற்புதமான கலைஞர். அவரோடு மிச்சமிருப்பது அவர் மகள் கௌரி. ஊரில் ஓய்வு பெற்று வாழும் போஸ்ட்மாஸ்டர். அனாதை

அக்னி ஊரெல்லாம் சுற்றித் திரிபவன். கிச்சாமியோடு சமையல் வேலைக்கு செல்பவன். சென்ற இடத்தில் கதிரேசன் என்ற பெரிய பணக்காரரின் பெண் சுலோச்சனா, கிச்சாமியோடு வந்து விடுகிறாள். கோயில் பூசாரி சன்னியா சிக்கிழவன் மகள் ராக்கியை மருமகன் கோபத்தில் அடித்துத் துரத்துகிறான்.

இப்படியாக இயங்குவது இந்தக் கிராமம். குறிப்பாக சில அக்கிரகாரத்து மனிதர். உதிரிகள் என்று சொல்லத் தக்க முறையில் சிலர்.

இவர்களுக்கிடையில் தமிழ்மணி. இவன் நாத்திகன், போக்கிரி, அரிஜன ஊமைப்பெண் சின்னம்மைக்கும் - எருமை மேய்க்கும் கோனார் இளைஞன் சிவக்கொழுந்து வுக்கும் ஊர்ச்சபைக் கூட்டத்தின்போது இவன் திருமணம் செய்து வைக்கிறான். பேரன் செத்துப்போன நிலையில் சுப்புலட்சுமிப் பாட்டிக்கு, பணம் திரட்டித் தர இவன் முன்வருகிறான். ஊர்க்காரர்கள் இவனை மெல்லவும் முடியவில்லை. தள்ளவும் முடியவில்லை.

கிச்சாமியின் தொல்லை சகிக்க முடியாமல் தற்கொலை செய்து கொள்ளும் சுலோச்சனா. கோயில் மாடாகத்திரிந்த பிரமிளா, அக்னியை இழுத்து அணைத்துக் கொள்கிறாள். திருவிழாவின்போது புறக்கணிக்கப்பட்ட இராஜமாணிக்கம் மகளோடு ஊரைவிட்டு வெளியேறி, நகரத்தின் தெருக்களில் நாதசுரம் வாசித்து திருப்தி அடைகிறார். பாட்டி கேணியில் மூழ்கி இறக்கிறாள். இப்படியாக ஒரு கொத்து மனிதர்களைப் பற்றிய பல நிகழ்ச்சிகளோடு கதை சொல்லுகிறார் ஆசிரியர். நிகழ்ச்சிகளின் வழியே மனிதர் களின் சித்திரங்களைத் தொடர்ந்து தீட்டுகிறார். அங்கங்கே இயற்கை அழகுகளை, பெண்களின் நளினங்களைத் தொடர்ந்து எழுதுகிறார். ருக்மணியின் தைரியத்தைச் சித்தரிக்கிறார். தமிழ்மணியின் போக்கிரித்தனத்தை எதிர்த்துப் பேசி அவனை அடக்குகிறாள் ருக்மணி. நாத்திக

னாகவும் போக்கிரியாகவும் உள்ள தமிழ்மணியிடம் நமக்கு மரியாதை குறையாமல் சித்தரிக்கிறார்.

ஏழெட்டுக் கதைகளின் தொகுதி என முன்னுரையில் நா.பா. கூறுகிறார். கதை தேடி ரசிக்கும் வாசகர்க்கு இந்த உணர்வுதான் மேலோங்கும். மனிதர்களிடம் கவனம் கொள்பவர்க்கு மெல்லியதான கதை போதும். மனிதர், அதற்கான சூழல், நிகழ்ச்சிகள், இவற்றின் வண்ணங்கள் வடிவங்கள் நிறைவு தரும்.

பாட்டியிடம் எல்லோரும் அன்பு கொண்டிருக்கின்றனர். சுலோச்சனா இறந்தபோது எல்லோரும் கூடி வருந்து கின்றனர். பார்ப்பனர்களுக்கு எதிரான குரல் அங்கங்கே எழுந்தாலும் ஊரில் பகை நிலவரம் இல்லை. மனிதர் களிடம் இன்னும் அன்பும் மரியாதையும் வசீகரமாகவே உள்ளன. மனிதர்களிடம் தொழில் திறன்களும் கலை உணர்வுகளும் குடிகொண்டுள்ளன.

## ராஜேசுவரி பாலசுப்பிரமணியம் 22

எண்பதுகளில் ஒரு சாதனையாளராக தமிழுக்கு அறிமுக மாகி இருக்கும் ராஜேசுவரி பாலசுப்ரமணியம், லண்டனில் குடியேறியுள்ள ஈழத்து தமிழ் எழுத்தாளர். வரலாற்றில் வைத்து தம் வாழ்வைக் காணும் திறம் பெற்றவர், ஈழத்துத் தமிழ்எழுத்தாளர். அண்மைக்காலவரலாற்றில் இவர்களுக்கு நேர்ந்த சோதனைகள், இவர்கள் வாழ்வையும், சிந்தனை யையும், கலையையும் உச்ச அளவில் பாதித்துள்ளன. இந்த அனுபவங்களை இலக்கியத்தில் பதிவு செய்து வைக்கவேண்டும். ராஜேசுவரி எழுதிய இரண்டு நாவல் களை இங்கு பார்க்கலாம்.

கோடையில் ஒரு விடுமுறை நாவல், லண்டனில் குடியேறி பத்தாண்டுகள் கழித்த நிலையில் பரந்தாமனின் சில கசப்பான அனுபவங்களைச் சொல்லுகிறது. நோயுற்ற தந்தையைப் பார்க்க இலங்கை வந்த பரமன், அங்கு தன்னை அன்னியனாக உணர்கிறான். கல்லூரியில் தன் காதலியாக இருந்த கார்த்திகா பின்னர் சிங்களக் காடையர்களால் கெடுக்கப்பட்டதை விதி என ஏற்று வாழ்கிற போதும், அவளை மறக்க இயலவில்லை.

பரமன் ஒரு தமிழன். லண்டனில் தான் உறவு கொண்ட பெண் தன்னால் கருவுற்றிருக்கிறாள் என்று அறிந்தபோது அவளை மணந்து கொண்டான். இலங்கையில் தன் காதலி அவள் உயிருள்ளவரை இவனை நினைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

இவன் நண்பன் சத்தியன், 77 கலவரங்களுக்குப் பின்னும் தமிழர் சிங்களவர் ஒற்றுமை பேசும் முற்போக்குவாதி. கார்த்திகாவின் தம்பி சபேசன் தமிழ் இன விடுதலைக்காகப் போர் நெறியைத் தேர்ந்து கொண்டவன்.

இவர்கள் பார்வையிலும், தன் பார்வையிலும் பரமன் ஒரு கோழை. குற்றவாளி. தன் காதலி கார்த்திகாவின் விருப்பத்தினை நிறைவேற்றுவது தன் கடமை என்று உணரும் பரமன், சபேசனையும் அவன் காதலியும் தன் தங்கையுமான பானுமதியையும் லண்டனுக்கு அழைத்துக் கொள்கிறான். சபேசன் லண்டனிலும் விடுதலைக்கான நாடகங்கள் தயாரிக்கிறான். பரமனின் மனக்கலக்கத்தை அறிந்து கொள்ளாத மரியம், இவனிடமிருந்து விவாகரத்துப் பெற்றுக் கொண்டாள். விமானப் பயணத்தின்போதும், இலங்கையிலும் தன்னிடம் ஆழ்ந்த பரிவு கொண்ட பெண்ணிய எழுத்தாளரான லிசா, உடல் உறவுக்கான இவன் விருப்பத்தை மறுத்துவிட்டாள். உயிர் வாழ்வுக்கான ஊக்கங்களை இழந்த நிலையில் பரமன் தற்கொலையைத் தேர்ந்து கொள்கிறான்.

ஈழத்தமிழர்களின் இன விடுதலைக்கான போராட்டச் சூழலில் பரமனும் இவனைச் சார்ந்தவர் வாழ்க்கையும் சொல்லப்படுகிறது. ஆசிரியரின் சார்பு வெளிப்படை யாகத் தெரிகிறது. பரமன் போருக்கு அஞ்சி வெளிநாடு சென்றவன். யாராவது ஒருவருடைய பாதுகாப்பு இவனுக் குத் தேவை.

லிசா பொருளியல் வாழ்க்கையை வெறுத்தவள். பெண் விடுதலையை நேசிக்கிறவள். இன்னொருமுறை தன்னை ஆடவனுக்கு அடிமைப்படுத்திக் கொள்ள முடியாது.

சத்தியன் கார்த்திகாவை மணந்து கொண்டதை பரமனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இலங்கையி லிருக்கும் பொழுது, போராட்டத்தை ஏற்றுக்கொள்ளும் பானுமதி, லண்டனில் தனக்கு கணவனாகப் போகும் சபேசனை போர் நெறியிலிருந்து விலக்கி, தன் கட்டுப் பாட்டில் வைத்துக்கொள்ள விரும்புகிறாள். மரியம் தொடர்ந்து படிக்கவும், தன் வாழ்வைத் தானே அமைத்துக் கொள்ளவும் விரும்பிச் செல்லுகிறாள். பரமன் இவற்றில் எதையும் புரிந்து கொள்ளவில்லை. இவன் சாகப் பிறந்த தமிழன்.

ஈழத்தின் கிழக்குப் பகுதியில் ஒரு கிராமத்தின் அழிவைச் சொல்லுகிறது **தில்லையாற்றங்கரை**. ஆறு பொங்கி சில சமயத்தில் கிராமத்தை அழிக்கும். இறுதியாக 66-ல் சிங்களர் திரண்டு வந்து இந்தக் கிராமத்தை முற்றாக அழித்தனர். இடைக்காலத்தில் தமிழர் உரிமைக்காகப் பாடு பட்ட தமிழரசுக் கட்சிக்குள், தலைமைக்காக நடைபெற்ற சண்டையும் இந்தக் கிராமத்தை அழித்துக் கொண் டிருந்தது. இந்தக் கிராமம் இப்பொழுது இல்லை. முன்பு அங்கு வாழ்ந்த மனிதர்களும் இப்பொழுது அங்கு இல்லை என்கிறார் ஆசிரியர். இந்தப் பின்னணியில் இரண்டு குடும் பங்களின் கதை, நாவலில் கௌரியின் பார்வையில்

சொல்லப்படுகிறது. கௌரி கல்வியை விரும்புகிறவள். காதலை ஒதுக்கியவள். ஊரில் பள்ளிக்கூடம் கட்ட வேண்டும். ஆசிரியர் ராமநாதன் மாணவர்களுக்கு முற்போக்குக் கருத்துக்களை எடுத்துச் சொல்பவர்.

கௌரியின் பெரியப்பாவுக்கும், ஊரில் இன்னொரு பெரியமனிதரான ராஜநாயகத்துக்கும் ஊரில்யார் பெரியவர் என்ற இடைவிடாத போட்டி. ராஜநாயகத்தின் மகன் செல்வராசன் தமிழரசுக் கட்சியில் தன்னை முக்கியப்புள்ளி யாக உருவாக்கிக் கொள்ள அலைகிறான். காதலிக்காமல் இவனால் இருக்க முடியாது.

பெரியப்பாவுக்கு அடங்கி வளர்ந்தவன் கதிரை வேலன். கல்யாணத்திற்குப் பிறகு வெட்டி வீம்பு காரண மாக மனைவி மரகதத்தை இவன் மறுத்தான். மரகதம் மனமுடைந்து தற்கொலை செய்து கொண்டாள். சாமியா ரோடு பழகி, கதிரைவேலன் காணாமல் போகிறான்.

மட்டக்களப்பில் தமிழ்க்காப்புப் போராட்டம். ஊரே திரண்டு செல்கிறது. சிங்களவர் தாக்குதலில் கிராமம் அழிந்தது. ஊரில் யாருமில்லை.

நிறைய மனிதர்களையும் நிகழ்ச்சிகளையும் கௌரியின் பார்வை வழியே சென்று நாம் புரிந்து கொள்கிறோம். நுட்பமான செறிவான சித்தரிப்புகள். விடுதலைக்கு எது வழி என்பது பற்றி கௌரியின் இடையறாத தேட்டம். குடும்பத்திற்குள் ஆண் ஆதிக்கம், பொறுப்பற்றவனின் சாமியார்த்தனம், தன்னை முதன்மைப்படுத்திக் கொள்ப வனின் தலைமைப்பித்து ஆகிய இழைகள் நாவல் ஆக்கத் தில் இணைந்துள்ளன.

உயர்சாதி குணங்களிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளாத ஒரு சமூகம், விடுதலைக்கான தகுதியைப் பெறுவதில்லை என்ற உணர்வை நாம் பெறுகிறோம்.

இந்தக் கிராமத்தின் ஆற்றங்கரையின் இயற்கையழகு சொல்லப்படுகிறது. மறைந்து போன ஒரு நாகரீகத்தின் சோகம் வாசகர்களை நிறைக்கிறது. நாவலில் மிகை உணர்ச்சி இல்லை. மனிதர்களை வரலாற்றில் வைத்துத் தான் சொல்லவேண்டும். படிக்க வேண்டும். வரலாறு தான் மனிதர்களைப் படைக்கிறது. அழிக்கிறது. இந்த உண்மை களை நமக்குக் கற்றுத் தருகிறது இந்நாவல்.

ஈழத்தமிழரின் வரலாறு சொல்ல ராஜேஸ்வரீ மாதிரீ ஒரு சில நல்ல எழுத்தாளர்கள் உள்ளனர். தமிழகத்தின் வரலாற்றை இங்கு யார் சொல்கிறார்கள்?

## தோப்பில் முகம்மது மீரான் 23

எண்பதுகளில் புதியவராக தமிழுக்கு அறிமுகமானவர் தோப்பில் முகம்மது மீரான். இவருடைய **கடலோர கிராமத்தின் கதை** ஒரு வெற்றிப் படைப்பென நாம் பாராட்டலாம்.

கன்னியாகுமரீ மாவட்டத்தின் கடலோர இஸ்லாமிய கிராமத்தின் கதையை செறிவாக, நேர்த்தி குறையாமல் சித்தரிக்கிறார். முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட, ஒரு கிராமத்து மக்களின், குறிப்பாக இஸ்லாமி யர்களின் பழமைப்பிடிப்பையும், பழமைக்கு எதிரான புதுமையின் உடனடியாக வெற்றி பெற முடியாத போராட்டத்தையும் நுணுக்கமாகச் சொல்கிறார்.

தங்ஙள் என்ற மந்திரவாதியை வைத்து முதலாளி தன் ஆதிக்கத்தை வலுப்படுத்திக் கொள்ள நினைக்கிறபொழுது, ஒரு கட்டத்தில் முதலாளியின் சரிவு தொடங்குகிறது. தன் மகள் ஆயிஷாவைத் திருமணம் செய்து கொள்ளும் உரிமை

யுடைய ஏழைத் தொழிலாளி பரீதுக்கு மகளைத் தர மறுக்கிறார். தொலைவில் ஒரு பணக்காரனுக்கு மணமுடிக்கப் பட்ட அவள், திரும்பி வந்து சேர்கிறாள். மந்திரவாதி தங்கள், முதலாளியின் வீட்டுக்குள்ளே கன்னம் வைக்கிறான்.

ஊருக்குள் ஆங்கிலப் பள்ளியை இஸ்லாமிய மக்கள் ஒப்புக் கொள்ளவில்லை. ஏழை எனினும் தன்மானத்தோடு முகமது நிமிர்ந்து நிற்கிறான். இஸ்லாமியத்திற்குள்ளிருந்தே தன் எதிர்ப்புக்கு நியாயம் சொல்லுகிறான் முதலாளியை தங்கள் ஏமாற்றி விட்டுச் சென்று விடுகிறார். அடங்கிக்கிடந்த மோதினார் கூட, முதலாளியை மதிப்பதாயில்லை. மகள் ஆயிஷா கடலில் விழுந்து தற்கொலை செய்து கொள்கிறாள். முதலாளி பைத்தியம் பிடித்து உளறிக்கொண்டு இருக்கிறார்.

முதலாளியின் சரிவை இரக்கம் தோன்ற மீரான் சித்தரிக்கிறார். பழமைப்பிடிப்பும், வறுமையும், அடக்குமுறையும் கிராமத்து மக்களை கோழைத்தனமும், மடமையும், சின்னத்தனமும் உடையவர்களாக ஆக்கியிருப்பதை நுணுக்கமாகச் சித்தரிக்கிறார். மந்திரவாதியின் மாய்மாலங்களை ஒரு பகுத்தறிவுவாதி போலக் காண்பிக்கிறார். செல்வ மிதப்புக்கிடையிலும், கணவனால் மறுக்கப்பட்ட இஸ்லாமியப் பெண்ணின் சோகத்தைச் சொல்லுகிறார். அடக்குமுறை, மனிதனுக்குள் இயல்பாகவே போராட்ட குணத்தை தோற்றுவிக்கத்தான் செய்யும் என்பதை முகமதுவின் மூலம் வெளிப்படுத்துகிறார். பழமைப் பிடிப்பிற்குள் உறைந்து கிடக்கும் மதம் எனப் பலரால் நம்பப் படும் இஸ்லாமியத்திற்குள்ளும் மனித எழுச்சிக்கான வித்துக்கள் இருப்பதைச் சொல்லுகிறார். செல்வச் செருக்கோடு வாழும் இஸ்லாமியக் குடும்பங்களின் ஆடம்பரம், கலைநேர்த்தி ஆகியவற்றையெல்லாம் சித்தரிக்கிறார்.

இஸ்லாமியரின் பழக்க வழக்கங்களுக்கும் இவற்றை வெளிப்படுத்தும் அரபுச்சொற்களுக்கும் பழக்கப்பட்ட நிலையில், ஒரு வட்டார நாவலின் மயக்கும் அழகிற்கு நாமும் வசப்படுகிறோம். ஆழ்ந்து பார்க்கும் பொழுது, இது ஒரு இஸ்லாமிய கிராமத்தின் கதை அல்ல. பழமைப்பிடிப்பு மிக்க ஓர் இந்திய கிராமத்தின் கதை என்பதை உணர்கிறோம்.

## காவேரி 24

பெண்ணிய நோக்கில் சற்று வித்தியாசமாக எழுதப்பட்ட நாவலென, காவேரியின் ஆத்துக்குப் போகணும் நாவலைச் சொல்லலாம்.

பெண்ணுக்கு வீடு (விடுதலை) இல்லை. விடுதலை தேடி இந்த நாவலில் பல பெண்கள் அலைகிறார்கள். குமுறுகிறார்கள்.

காயத்திரிக்கு நல்ல கணவன் இருந்தும், டெல்லியில் வசதியாக வாழ தொகுப்பு வீட்டில் ஒரு பகுதி கிடைத்த பிறகும், விடுதலை இல்லை. வீடு இவள் நெஞ்சத்தை அமுக்குகிறது. இளமைக்காலத்தில் மைசூரில் கொடிகள் படர்ந்த தாத்தாவின் வீட்டில் தோழிகளோடு கூடி ஆடி மகிழ்ந்த இந்தப் பெண்ணுக்கு, இளமைக்காலத்து சுதந்திரமும், பரவசமும், இயற்கைச் சூழலும் இப்பொழுது இல்லை. இவை இந்தப் பெண்ணுக்கு இனி கிடைக்கப் போவதில்லை.

காயத்திரியின் நிலை இப்படி இருக்கும் பொழுது, அலுவலகங்களில் பணிபுரியும் சில பெண்களின் நிலை, தற்கொலை நோக்கி அவர்களைத் தள்ளுகிறது. தற்கொலைதான் இப்பொழுதைக்கு அவர்களுக்கு விடுதலை.

ரமா பேராசிரியர். இவள் கணவன் துரை. தமிழ் நாட்டு கிராமங்களில் பெற்றோரின் இடைவிடாத கவனிப்புக்கும், சிலசமயம் அடக்குமுறைக்கும் உள்ளாகி மனம் சுண்டிப்போனவன் துரை. ரமாவுக்கு இவன் எப்படி விடுதலை வழங்க முடியும்?

எழுத்துலகிற்குள் ரமாவுக்கு விடுதலை கிடைக்கிறதா? இன்னொரு பேராசிரியரோடு கொள்ளும் சுதந்திரமான உறவு ரமாவுக்கு தருவது தற்காலிக விடுதலை.

உடலும் கூட ஒரு சிறை என்று இந்த நாவல் பேசுகிறது. நம் சமூகச் சூழலில் பெண்ணின் உடலை வைத்து ஆண் அவளைச் சிறைப்படுத்துகிறான் என்று இதற்குப் பொருள் காணலாம். மூன்றாம் உலக நாடுகள் என்ற சூழலில் பெண்ணை வைத்தும் இந்த நாவல் சிலவற்றைச் சொல்லுகிறது. பெண்ணுக்கு மட்டுமா இங்கு விடுதலை இல்லை? ஆண்களுக்கும் தான் இங்கு விடுதலை இல்லை. இந்த நாவலில் ஆண்களைப் பற்றிய எரிச்சல் எதுவும் கொட்டப்படவில்லை. இந்த நாவலைப் படித்து முடிக்கும் போது நாம், எல்லோருமே ஒரு சிறையில் அகப்பட்டிருப்பதைப் போன்ற உணர்வை இந்த நாவல் நமக்குள் ஏற்படுத்துகிறது.

காயத்திரிக்குள் ரமாவும், ரமாவுக்குள் காயத்திரியும் இருப்பதை, இயங்குவதை ஆசிரியர் கண்டிருந்தால் நாவலின் ஆழம் இன்னும் கூடியிருக்கும். துரை யாரைத் தேடிப் போவான்? தானே உருவாக்கிக் கொண்ட சிறைக்குள் துரை பொருமியபடி நடைபோடுகிறான். டாக்டருக்குப் படிக்கும் இன்னொருத்தியின் மகனை, தன் மகள் மூலம் சிறைப்பிடிப்பதில் ஒருத்தி வெற்றி பெறுகிறாள். இப்படி பெண்ணும் இன்னொருத்தியைச் சிறைப்பிடிக்கிறாள். இப்படியும் நாவலில் சில பரிமாணங்கள் இருக்கின்றன.

## சூரியகாந்தன் 25

உழவர்களின் வேளாண்மையை அடிப்படையாகக் கொண்ட கொங்குநாட்டுக் கிராமங்களில் போதிய தண்ணீர் இல்லை. காடுகள் தொடர்ந்து அழிகின்றன. நகரங்களும் தொழிற்சாலைகளும் நிலத்தடி நீரை உறிஞ்சி விடுகின்றன. கோவை நகரையடுத்த கிராமம் ஒன்றில் வாழும் உழவர் களின் வறிய வாழ்வை, நீருக்காக நெடுந்தொலைவு அலையும் கொடுமையை சூரியகாந்தனின் **மானாவாரி மனிதர்கள்** நாவல் சொல்லுகிறது.

குடிக்க நீர் இல்லை. மலையடிவாரங்களில் சாராய உற்பத்தியும் விநியோகமும் தாராளமாக நடைபெறு கின்றன. சாராய வியாபாரி சாம்பான், கிராமப் பஞ்சாயத்து முடிவை அவமதிக்கிறான். கிணறு வெட்டி வயிறு பிழைக்கும் ஏழை உழவன் கிணற்று வெட்டின்போது விபத்துக்குள்ளாகி காலை இழக்கிறான். வயிறு பிழைக்க சாராயம் விற்கிறான். சிறைக்குச் செல்வது பற்றிய அச்சத்தை இவன் பாதுகாத்துப் பயனில்லை.

உழவர் குடும்பங்களில் மிஞ்சியிருக்கும் நிலத்தை மக்கள் பிரித்துக் கொள்கிறார்கள். வண்டி மாட்டை வைத்துக் கொண்டு வயதானவர் வண்டி ஓட்டிப் பிழைக்க வேண்டும். மனநிம்மதிக்கு பழனி ஆண்டவன் பெயர் சொல்ல வேண்டும். உழவர் குடிப்பெண்கள் கடும் உழைப் பாளிகள். இந்தத் தாய்மார்கள் தான் இன்னும் ஊரை வாழ வைக்கிறார்கள்.

காளப்பட்டி அய்யனுக்கு வயது தொண்ணூறு. வயது தொண்ணூறுதான் என்று சொல்ல முடியாது. ஊர் மக்களின் தலைமுறை வரலாற்றை இவர் எடுத்துச் சொல்

வதைப் பார்க்கும் பொழுது, இவர்க்கு வயது தொள்ளாயிர மாகவும் இருக்க முடியும்.

கொங்குநாட்டு கிராமத்தின் நிகழ்காலச் சித்திரம் இந்நாவல். மக்களின் பேச்சுமொழி, பழமொழி முதலியவை இந்த நாவலில் சிறப்பாகப் பொருந்தியுள்ளன. நகர வளர்ச்சி இந்தக் கிராமத்தை அழிப்பது பற்றியோ, அரசு அதிகாரம் முதலாளியம் ஆகியவற்றின் சுரண்டல்கரங்கள் கிராமத்திற்குள் ஊடுருவிச் செல்வதையோ, இந்த நாவல் சொல்லவில்லை. கொங்குநாட்டு மனிதர்களின் அற்புத மான அழகு இந்த நாவலுக்குள் ஒரு கைப்பிடி அளவுக் கேனும் வந்திருக்கிறது. மனிதர்களை மானாவாரிகளாகக் கண்டதில் ஆசிரியரின் பார்வையை நாம் பாராட்டலாம்.

## சிவகாமி 26

தமிழில் எழுதப்பட்ட 'தலித்' நாவல் என்ற சிறப்பிற் குரியது சிவகாமியின் **பழையன கழிதலும்.**

காத்தமுத்து இந்த நாவலின் எதிர் நாயகன். அதாவது இவனுக்குள் கதைக்குரிய ஒரு தலைவனும் வில்லனும் இணைந்திருக்கிறார்கள். நெடுங்காலமாக நில உடைமையாளர்களின் அடக்குமுறைக்கும், திமிர்த்தன மான போக்குகளுக்கும் ஓர் எதிர்வினையாக நிற்பவன் காத்தமுத்து.

இரண்டு பேர் இவனுக்கு மனைவிகள். உதவிகோரி வரும் இன்னொருத்தியின் உடலும், அவள் பணமும் இவனுக்கு வேண்டும். உயர்சாதி மக்களில் ஒரு சிலர் நெஞ்சங்களிலாவது அச்சத்தை விதைப்பதில் காத்தமுத்து வெற்றி பெற்றிருக்கிறான்.

நாவலில் இவன் மகள் கௌரி இவனுக்கு எதிர்ப் போக்கில் வளர்கிறாள். தலித் மக்களின் எதிர்காலம், கௌரியையும், கௌரியின் குணங்களோடு இளைஞர்களையும் சார்ந்து பழையன கழித்து புதியதாக உருவாக்கலாம்.

உயர் சாதியினர்க்கும் தலித் மக்களுக்கும் இடையில் நிலவும் கடுமையான பகைச்சூழலில் ஒரு சிறுபொறியும் பெருநெருப்பாக வெடிக்கலாம் என்ற முறையில் ஊருக்குள் வெடிக்கும் ஒரு சாதிக்கலவரம் பற்றிய சிறப்பான சித்தரிப்பு, இந்த நாவலில் இடம் பெறுகிறது. கூடியவரை, தலித் மக்களின் யதார்த்தமான வாழ்க்கை, இரத்தமும் சதையும் கலந்த வடிவத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தமிழில் உருவாக வேண்டிய பல தலித் நாவல்களுக்கு இந்த நாவல் ஒரு சிறந்த முன்னோடியாகலாம்.

## தமிழவன் 27

தமிழவனின் **ஏற்கனவே சொல்லப்பட்ட மனிதர்கள்** என்ற நாவலை எண்பதுகளின் தனித்துவம் மிக்க சோதனை முயற்சி என்று சொல்லலாம்.

நாகர்கோவில் வட்டாரத்தில் தமிழ்க்குடும்பம் ஒன்றில் மூன்று தலைமுறை வாழ்க்கையை இந்த நாவலில் சொல்லுகிறார். தமிழ்க்குடிக்கு கடந்த சில பத்தாண்டு களில் சொல்லப்பட்ட பெருமைகளை வரலாற்றின் சிக்க லான நம் கால நிலைமைகளினூடே மதிப்பிடும் பொழுது, தமிழனைப் பற்றிய ஒரு கேலிச்சித்திரம்தான் தெரிய வந்திருக்கிறது. இத்தகைய கேலிச்சித்திரம் வேறு சில அம்சங்களோடு இந்த நாவலில் வெளிப்படுகிறது.

தமிழன். வார்த்தைகளில் வாழ்பவன். வீரசபதங்கள் எடுத்துக் கொள்பவன். கல்லோடும், மண்ணோடும், மலைகளோடும் தனக்கு உறவு சொல்லிக் கொள்பவன். வானோடு தோன்றிய மூத்தகுடி. காதல் என்ற ஞானத்தை முழு அளவில் கொண்டவன். தாவரங்களோடும் விலங்குகளோடும் உறவு கொண்டவன்.

முன்னோரின் மரபுகளை மதிப்பவன். சாமியின் தொடர்ச்சியைத் தனக்குள் புதுப்பித்துக் கொள்பவன். நவீன மருத்துவ முறைகள் வந்த பின்பும் மரபு மருத்துவ முறைகளை விடமுடியாதவன். நம்பிக்கை சார்ந்த தன் அறிவையும் பார்வையும் அழித்துக் கொள்பவன்.

சாதிக்குள்ளும் உறவுக்குள்ளும் அடிக்கடி வம்பு வழக்குகளில் ஈடுபட்டு ரத்த வெறியோடு அலைபவன். ரத்தத்தை வெளியேற்றிக் கொண்டால்தான் இவனுக்கு ஓரளவு நிம்மதி. கோபம் என்ற மிருகத்தின் ஆட்சியில் இவன் வாழ்பவன்.

தெருக்களில் அல்லது வீடுகளில் சண்டையிட்டுக் கொள்ளும் போது, ஆண் பெண் பாலுறவுத் தொடர்பான சொற்களின் மூலம், தன் உணர்வுகள் தீர்த்துக் கொள்பவன். தனக்குள் பேய் பிசாசு நம்பிக்கைகளைக் கொண்டிருப்பவன். இவ்வாறு தமிழனைப் பற்றிய பலவகையான விமரிசனங்களை தமிழவன் இந்நாவல் மூலம் வெளிப்படுத்துகிறார்.

சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காவியங்கள் மட்டுமல்லாமல் தமிழ்நாட்டில் வழங்கும் நாட்டுப்புறக் கதைகளிலும், தாவரங்கள், விலங்குகள் (பல்லி, கிளி, குறிப்பாக பஞ்சவர்ணக்கிளி, வௌவால், கழுகு, ராசாளி, நாய், நரி, பாம்பு) பறவைகள், தெய்வங்கள், பேய்கள் (காளியும் கூளியும்) ஆகிய உருவகங்கள் அல்லது குறிகள் மூலம் கதை சொல்லும் மரபு செயல்படுவதை நாம்

அறிந்துள்ளோம். மரபின் இந்தக் கூறுகள் அல்லது குறிகளின் மூலம் தமிழவன் நம் நிகழ்காலத் தமிழனின் கதையைச் சிறப்பாகச் சொல்லுகிறார்.

கதை சொல்வது அல்லது படிப்பது என்பது கருத்துக்கள் அல்லது விமரிசனங்களுக்காகவும், அதே சமயம் கதைக்காகவும் தான். இவ்விரு அம்சங்களும் இந்நாவலில் சிறப்பாக இணைந்திருக்கின்றன.

தாத்தா, தன் தம்பி மகன் முத்துப்பிள்ளையைக் கொலை செய்தார். தாத்தாவின் தம்பி உருத்திரமூர்த்தி. தாத்தா தன் இளமைக்காலத்தில் திருவிதாங்கூரில் வீரசாகசத்தில் ஈடுபட்டவர். அரண்மனையில் இருந்த அரசி ஒருத்தியின் வைரமாலையை அவளறியாமல் எடுத்துவந்து தன் வீரசாகசத்தை நிலைநாட்டிக் கொண்டவர்.

முத்துப்பிள்ளையின் காதலி ஊர்வசியை அவன் தந்தை உருத்திரமூர்த்தி அகப்படுத்திக் கொண்டார். முத்துமாரி உருத்திரமூர்த்தியின் மகள். உருத்திரமூர்த்தி செத்தபோது அவரது நிழல் ஊருக்குள் படிந்தது. முத்துப்பிள்ளையின் ஆவி, வெளவாலாய் ஊருக்குள் காணப்பட்டது.

தாத்தாவின் மகன் ராசப்பன், கன்னிமேரியின் காதலில் முழுகி எழுந்து, சிநேகப்பூவை திருமணம் செய்து கொண்டவன். ராசப்பனுக்கு இரண்டு பையன்கள். ஒருவன் ஜான். இன்னொருவன் பால்.

சுபாஷின் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட கோபால்ராஜோடு ஓடி, அவனைத் திருமணம் செய்து கொண்டு திரும்பியவள் முத்துமாரி. மனைவிக்கு அஞ்சியவன் கோபால்ராஜ். புகைப்படக் கலைஞன்.

ஜான் படிக்கும் பொழுது பச்சைப் பாவாடைக் காரியை மோகித்து, அவள் நினைவாக அலைந்து, அவளால் உதறப்பட்டு, அப்புறம் அவளைத் திருமணம் செய்து கொண்டவன். ஆங்கிலம், ஜானின் ரத்தத்தைச் சுண்ட வைத்தது.

தாத்தா வயதாகி, உடல் நோய்க்காளாகி வீட்டின் இருண்ட அறையில் கிடத்தப்பட்டவர். தாத்தாவின் புராதனக்குணங்கள் அவர் வம்சத்தைச் சேர்ந்த அனைவரி னுள்ளும் பொங்கி வழிகின்றன. பரத்தையின் தொடர்பு இல்லாமல் ஆண்கள் இல்லை. காமத்தில் ஆணும் பெண் ணும் ஒருவரை ஒருவர் சித்திரவதை செய்து கொள்கின் றனர். எல்லாருக்குள்ளும் விரைவில் சோம்பலும் மந்தமும், மறதியும், புராதனப் பெருமை பற்றிய உணர்வும் வந்து நிறைகின்றன. எல்லோரும் கனவுகளில், நிழல்களில் வாழ்கிறார்கள். எல்லாருடைய மனத்திற்குள்ளும் குருவி அல்லது கிளி இடைவிடாது பேசுகிறது. மனத்திற்குள் பறவைகள் குடியிருக்கின்றன. மிருகங்கள் வெளிப்படு கின்றன. எல்லோரும் வார்த்தைகளினுள் கட்டுண்டு கிடக் கின்றனர். இவர்களிலிருந்து தப்பித்துக் கொண்டவன் பால் ஒருவன் மட்டுமே. இது கதையின் ஒரு பகுதி சித்திரம்.

புராதனப் பெருமை சொல்லிக் கொண்டு மலைக்கப்பா லிலிருந்து ஊர்வலம் வருகிறது. தாத்தாவின் வீரக்குடியில் வந்தவன் ராசப்பன். பஞ்சாயத்து தேர்தலில் நிறுத்தப்படு கிறான். எதிர்க்கட்சிகள் முத்துப்பிள்ளை பற்றி சொல்லி இவனைத் தோற்கடிக்க முனைகிறார்கள். முத்துப்பிள்ளை போக்கிரி. தன் அப்பாவுக்கு எதிரி.

ஊருக்குள் கேரளாவிலிருந்து வந்த மீசைக்காரன் இளைஞர்களுக்கு கம்யூனிசம் கற்றுக் கொடுக்கிறான். பொருளாதாரத்தில் பி. ஏ. படித்த இளைஞன் ஒருவன் ஐந்தாண்டுத் திட்டங்களை அதிசயம் போல் சொல்கிறான்.

மீசைக்காரன் குளத்தில் செத்துக்கிடந்தான். இளைஞனின் கனவுகளோடு ஜான சுற்றி வந்தான்.

ஊருக்கு வெளியில் இருந்த கிழிந்த சட்டைக்காரர் குடியிருப்பில் மீசைக்காரன் தோன்றினான். தாத்தாவின் காலத்தில் அவருக்கு அடிமைப்பட்டு, வயல்வரப்புகளில் அவரது ஆடு மாடுகளோடு திரிந்தவர்கள், இந்த கிழிந்த சட்டைக்காரர்கள், ஊருக்குள் வந்து இவர்கள் கலகம் செய்கிறார்கள். குற்றவாளி என்று எழுதப்பட்ட அட்டையோடு ஊரில் ஒருவன் கொல்லப்பட்டுக் கிடந்தான். மலைக்கப்பாலிருந்து புராதனப்பெருமை சொல்லும் கட்சிக்காரர்கள் அனுப்பிய போலீஸ்படை ஊருக்குள் நுழைந்தது.

கதையின் இந்தப் பகுதியில் கம்யூனிஸ்ட் கட்சி, நக்சலைட் இயக்கம், தி. மு. க. இயக்கம், தேர்தல் ஆகியவற்றோடு கூடிய நம் கால வரலாறு சொல்லப்படுகிறது. தமிழ்ப்பெருமை சொல்லும் புராதனக் குடிக்கு எதிர்நிலையில், கம்யூனிஸ்டுகள், குறிப்பாக நக்சலைட்டுகள் செயல்படுகிறார்கள்.

இருண்ட அறையில் புழுத்துக்கிடக்கும் தாத்தா என்ற உருவகத்தின் மூலம், தமிழ்ப்பெருமை காலம் கடந்தும் ஆதிக்கம் செய்வதைப் புரிந்து கொள்கிறோம். வயதாகி வரும் எல்லார்க்குள்ளும் இந்தத் தாத்தாவின் நிழல் இடம் பிடித்துக் கொள்கிறது. தமிழனிடம் சமகால உணர்வு செயல்படவில்லை.

நாவலைத் தொடர்ந்து படிக்கும் போது, ஒரு தெருவில் பலரும் கண்டமேனிக்கு அடித்தும் கடித்தும் குதறிக் கொள்வது மாதிரியும்; காட்டில் மிருகங்களும் பறவைகளும் ஒன்றை ஒன்று மாறி மாறி கொத்தியும், கீறியும், கடித்தும், தின்றும், வெறியோடு அலைவது மாதிரியும்; காமக் களியாட்டம் நடைபெறும் ஒரு கூடத்தில் கண்ட மேனிக்கு கடித்தும், குதறியும், இரத்தம் குடித்தும்,

புணர்ந்து கொள்வது மாதிரியும், நமக்கு அருவருப்பான உணர்வுகள் ஏற்படுத்தும் முறையில் அல்லது ஏற்படுத்தும் நோக்கில் தமிழவன் கதை சொல்கிறார். தமிழ் பற்றிய, தமிழனைப் பற்றிய விமரிசனங்களை இத்தகைய சித்தரிப்புகள் வெளிப்படுத்துகின்றன. இவ்வகை உணர்வுகளை நமக்குள் ஏற்படுத்துவது மூலம், நாவல் என்ற இந்த சோதனை முயற்சியின் வெற்றியை நாம் ஏற்கமுடியும். நம் கால வரலாற்றை இன்னும் எத்தனையோ வடிவங்களில், அர்த்தங்களில் உணர்வுகளோடு சொல்ல முடியும் என்பதற்கு இவ்வகை நாவல் ஒரு முன்னோடி.

## ஹெப்சிபா ஜேசுதாசன் 28

புத்தம் வீடு, டாக்டர் செல்லப்பா போன்ற சிறந்த வட்டார நாவல்கள் எழுதி புகழ் பெற்ற ஹெப்சிபா ஜேசுதாசன் எழுதிய இன்னொரு நாவல் மா-னீ.

பர்மாவின் வடகோடியில் காட்டிலாகா அதிகாரியாகப் பணியாற்றி, இரண்டாம் உலகப்போரின் போது பர்மாவை விட்டு வெளியேறிய திரு. செல்வராஜ் அவர்களின் குடும்பக் கதை சொல்லும் நாவல் இது.

ஐராவதி ஆறு, பர்மாவின் உயிர் நதி அல்லது பேருயிர். பர்மியரின் புத்தமதம், பகோடா, மததுற போங்கிகள் - இவைபற்றிய நிதானமான அழகிய சித்தரிப்புகளை இந்த நாவல் கொண்டிருக்கிறது. இந்தியர் மீது பர்மியர்க்குள் உருவாகி வரும் வெறுப்புணர்வை நாவல் சொல்லுகிறது.

செல்வராஜ் அவர்களின் மூத்த மகன் ரஞ்சன்ராஜ். பர்மியப் பெண்ணைக் காதலித்து, அவர்கள் வற்புறுத்த

லின் பேரில் வேறு வழியில்லாமல் திருமணம் செய்து கொண்டான். இளையவன் ஸ்டான்லி விமானப்படையில் சேர்ந்தான். போர்ச்சூழலில் பர்மாவை விட்டு வெளியேறும் நிர்ப்பந்தத்தின்போது குடும்பம் சிதறியது. வழியில் செல்வ ராஜ் இறந்தார். மகள் ராணி - இவரது பர்மியப் பெயர் மா னி. பல துன்பங்களுக்கிடையில் பனைவிளைக்கு வந்து சேருகிறாள். பின்னர் தாய் அன்னம்மாளும் வந்து சேரு கிறார்.

அப்பாவுக்கு அடங்க மறுத்தாலும், அப்பாவுக்கான சேவை செய்வதில் ரஞ்சனின் பற்று, குடும்பத்திற்குள் சகோதரர் பாசம், பர்மிய வேலைக்காரர் பற்றி நுட்பமான சித்தரிப்பு, பொருளைக் காட்டிலும் மனித உறவுகளுக்கு அதிக மரியாதை ஆகியனவும் நாவலை அழகுபடுத்து கின்றன.

'புத்தம் வீடு' ஆசிரியரின் இன்னொரு தரமான நாவல் என்ற தகுதிக்குரியது. இந்நாவல் பர்மாவை நமக்குள் சித்திரமாக நிறுத்துவதில் ஆசிரியரின் வெற்றி குறிப்பிடத்தக்கது. மனிதர்களை, அவர்களது குணச் சித்தரிப்பின் வழியே நமக்குள் ஆசிரியர் நிறுத்துகிறார். தேர்ச்சி பெற்ற கலைஞர் என்பதை ஹெப்சிபா திரும்பவும் மெய்ப்பித்திருக்கிறார்.

## அசுவகோஷ் 29

அசுவகோஷின் சிறகுகள் முளைத்து என்ற நாவலை இப்பொழுது பார்க்கலாம்.

பாஸ்கரன் தாழ்த்தப்பட்ட சிறுவர்க்கான விடுதியில் சேர்க்கப்பட்டு தொழிற்கல்வி பயின்றவன். முதலில் கட்டிட வேலை செய்கிறான். பின்னர் தொழிற்சாலை

வேலை. தொழிற்சங்கம், போராட்டம் ஆகியவற்றில் இணைகிறான். சென்னை நகர சேரிக்கு நிகரான தெருவில் தாய் வாழ்கிறாள். இந்தக் கதை ‘செம்மலருக்கு’ தேவையான கதை.

பாஸ்கரனின் அக்கா குடிகாரக் கணவனிடம் பெற இயலாத இன்பத்தை சாமிநாதனிடம் பெறுகிறாள். பாஸ்கரனின் தாய் விபச்சாரம் செய்து மகனைப் படிக்க வைத்தாள். சதாசிவ வாத்தியார் தம் மனைவி இறந்தபின் தன் உறவுப் பெண்ணோடு (மல்லிகா) வாழ்கிறார். தன் மகனுக்கு தன் விபச்சாரம் தெரிகிற போது, தாய் தற்கொலை செய்து கொள்கிறாள். பாஸ்கரனை தனக்குரியவனாகச் செய்து கொள்ள மல்லிகா செய்த முயற்சி வெற்றி பெறவில்லை. வாத்தியார் இறந்தபோது அவருக்கு கொள்ளி வைக்க மல்லிகா அழைக்கிறாள். இதுவும் ஏழைத்தொழிலாளிகளின் சோகக் கதைதான். தேவானை செய்யும் விபச்சாரத்தில் வடிவேலு குடிக்கிறான். அவள் முருகேசனை காதலிக்கிற போது வடிவேலு கொதிக்கிறான்.

இந்தக் கதை செம்மலருக்குப் பிடிக்காது. ஏழைகள் பற்றி, தொழிலாளர்கள் பற்றி இப்படி எழுதக்கூடாது. ஆனால் அசுவகோஷ் இந்தக் கதையைத்தான் எழுதுகிறார். ஏழைத்தொழிலாளரின் வாழ்க்கை நிலவரங்களை மறைக்கக் கூடாது. இந்த வாழ்க்கைக்குள்ளும் மேன்மைகள் உண்டு. தேவானை அன்பு நிறைந்தவள். எல்லோருக்காகவும் ஓடி உதவி செய்பவர் வாத்தியார். அம்மா ஒரு தெய்வம். அக்காள் செய்தது தவறல்ல. வாழ்க்கைக்குள் சுதந்திரம் வேண்டும். உறவுகள் வேண்டும். நிலப்பிரபுத்துவம் திணித்த கட்டுகள் உடைய வேண்டும். நிலப்பிரபுத்துவம் திணித்த கட்டுப்பெட்டித்தனமான உறவுகளை அழிக்கத்தான் வேண்டும். சோசலிசத்தில் குடும்பம் இல்லை. இத்தகைய நோக்கை முன்வைத்து இந்த நாவலை எழுதியிருக்கிறார் அசுவகோஷ்.

யதார்த்தத்தை மூடி மறைத்து அரசியல், தத்துவம் பேச முடியாது. உடைத்துப் பார்க்கத்தான் வேண்டும். மனிதர்கள் அன்புக்கு, நல்ல உறவுக்குத் தவிக்கிறார்கள். மல்லிகாவோடு பாஸ்கரன் சேர்ந்து வாழலாம். பாசாங்குத் தனம் வாழ்க்கையிலும் கூடாது. தத்துவத்திற்குள்ளும் கூடாது. அசுவகோஷ் விரும்புகிறபடி விவாதங்கள் தேவைதான்.

## சாருநிவேதிதா 30

ஒரு சிலர் விரிவாக விவாதித்திருக்கும் நிவேதிதாவின் **எக்சிஸ்டென்ஷியலிசமும் ஃபேன்சி பனியனும்** நாவலைத் திரும்பவும் படிக்கும் பொழுது அவர்கள் கூறுகிறபடி இந்த நாவல் பெருமளவுக்கு வித்தியாசமான படைப்பாகத் தோன்றவில்லை.

நாவல் என்ற வடிவத்திற்குள், உண்மையில், எழுதப் பட்ட சில நண்பர்களின் கடிதங்கள் சேர்க்கப்பட்டிருக் கின்றன. சூரியா எழுதி எரித்த பிறகு மிஞ்சியிருக்கும் நாவலின் பகுதியோடு கிளிங்கோவிட்ஸ் என்ற இன்னொரு கற்பனை எழுத்தாளர் எழுதிய இன்னொரு பகுதி சேர்க்கப் பட்டிருப்பதைப் போன்ற உருவம் காட்டுகிறது இந்த நாவல். இது புதுமையென்று உரத்துச் சொல்வதற் கில்லை.

ஏற்கனவே தமிழ்ப்பத்திரிக்கைகள், புத்தகங்கள் ஆகிய வற்றில் எழுதப்பட்டிருக்கும் உண்மை அல்லது கற்பனை யான பாலியல் அனுபவங்கள் இந்த நாவலிலும் இடம் பெறுகின்றன. இலக்கியம் என்று மரியாதையோடு சிலர் சொல்லிக் கொள்ளும் ஒருவகை எழுத்தினுள் இம்மாதிரி

சில அனுபவங்கள் அல்லது விவரிப்புகள் இடம் பெறு வதைப் படித்து நாம் முகம் சுளிக்க வேண்டியதில்லை.

பாலியல் பிறழ்வுகள் என்பனவும் வாழ்க்கையினுள் இயல்பாக நிகழ்வன என்பதை நாம் மறைக்க வேண்டிய தில்லை. பிறழ்வு என சொல்லப்படும் பாலியல் அனுப வங்கள் சிலவற்றை எழுத்தில் வெளிப்படுவதை வைத்து இந்த நாவல், மரபுக்கும், மதத்திற்கும், அரசுக்கும் எதிரான கலகக்குரலைக் கொண்டிருக்கிறது என்று சாதிக்க வேண்டியதில்லை. உடைமையும் அதிகாரமும் ஆதிக்கம் செய்யும் நம் சமூகம், இத்தகைய பிறழ்வுகளை யும் கலகக் குரல்களையும் உள்வாங்கிக் கொண்டு தன் ஆதிக்கம் குலையாமல் இருக்கத் தெரிந்திருக்கிறது.

இந்த நாவலில் நம் சமூகத்து அடித்தள மக்களின் சிக்கலான, சேறும் சகதியும் நிறைந்த, மாற்றத்திற்கு வழி தெரியாத, அவலம் மிக்க வாழ்வியல் அனுபவங்கள் நிறைய சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த மக்கள் குடிக் கிறார்கள். சூதாடுகிறார்கள். பெரியவர்கள் தம் மக்களை வீட்டை விட்டுத் துரத்துகிறார்கள். கைக்குக் கிடைத்த எந்த ஆணோடாவது இவர்கள் ஓடுகிறார்கள். தங்களுக் குள் அடித்துக் கொள்கிறார்கள். சிறைக்குச் செல் கிறார்கள். பெண்கள் பேய் பிடித்து அலைகிறார்கள். பில்லி சூனியம் என்று சொல்லுகிறார்கள். வைத்தியர்கள் சுடுகாட்டில் திரிகிறார்கள். பேய் பிடித்த பெண்களைக் குணப்படுத்துகிறார்கள். அடிக்கடி வீட்டை விட்டு ஓடும் பெண்ணைக் கூட தனக்கு மனைவி என்றும், தன் குழந்தை களுக்கு தாய் என்றும், இவளை விலக்க முடியாத கணவன் சொல்லிக் கொள்கிறான். வேசிகள் வீடுகளைத் தேடிவரும் ஆண்கள் அடிக்கப்படுகிறார்கள். பசிக்காக இவர்கள் எதையும் செய்வார்கள். எந்த வகையிலாவது இவர்களுக்கு காசு கிடைக்க வேண்டும். நேர்மை, நாணயம் என்பவை இவர்களுக்கு ஆடம்பரங்கள். இவை பற்றி, வேறு எந்த

ஒரு நாவலும் சொல்லாத அளவுக்கு வாழ்வியல் உண்மை களை இந்த நாவல் சொல்லுகிறது.

சூரியாவின் டெல்லிச் சூழல் நாவலின் இன்னொரு முக்கியப்பகுதி. திருடு, பிச்சை எடுக்காதே என்கிறான் மிஸ்ரா. இவன் சிறையில் செத்துப் போகிறான். கபூரால் ஒதுக்கப்பட்ட கிரன், சுதந்திரமாய் நண்பனோடு வாழ் கிறாள். ஆதி, கவிதையை விஞ்ஞானமாக்கியவன். இவன் வயிற்றுப் பசி என்ற நெருப்பில் எரிகிறான். ஒரு பெண் ணைத் திருமணம் செய்து ஆண் வாழ முடியாத ஒரு சமூகச் சூழலில், தன் சகோதரிக்காக சீர்வரிசைகள் செய் வதை சூரியா வெறுக்கிறான்.

ஒரு பிரச்சினை அதன் தீர்வு என்ற நேர்கோட்டில் இந்த நாவல் செல்லவில்லை. பல பிரச்சினைகள், தீர்வை இவை சொல்வதில்லை. இவ்வகையான சமூக நிலவரங் களைச் சொல்லும் ஆவணமாக இந்த நாவல் அமைகிறது. ரசனையைக் காட்டிலும் சமூகம் பற்றிய அறிவு பெரிது. வாழ்க்கை அர்த்தங்களைச் சேகரித்துக் கொள்ள இயல வில்லை. வாழ்க்கைக்குள் கலாச்சார குணங்களைக் காப் பாற்ற முடியவில்லை.

'எக்சிஸ்டென்சியலிசமாவது மயிராவது' என்ற குரல் நாவலுக்குள்ளிலிருந்து எழுகிறது. வாழ்வின் அர்த்தம் சொல்வது இருத்தலியல். வாழ்வுக்கு அர்த்தமில்லை. ஆகவே எதையும் செய்யலாம் என்பது இருத்தலியல் இல்லை.

## சி. எம். முத்து 31

தஞ்சை மாவட்டம் குடமுருட்டி ஆற்றுப் பகுதியில் வாழும் வாகறைக் கள்ளர்களின் சாதி வெறி பற்றியது சி. எம். முத்துவின் **கறிச்சோறு** நாவல்.

பரமசிவம் அறுத்துக் கட்டும் கள்ளர் சாதியைச் சேர்ந்தவன். வேற்றூரிலிருந்து குடி வந்தவன். இவன் வாகறைக் கள்ளர் பெண் கமலத்தை காதலிக்கக்கூடாது. திருமணம் செய்ய முடியாது. கறிச்சோறு விருந்துக்கு இவன் அழைக்கும் போது கள்ளர் சாதி பெரிய மனிதர்கள் கூடுகிறார்கள். கேள்வி கேட்ட இவனை 'சாதி இருக்கு தடா சாதி' என்று கத்தி அடித்து நொறுக்குகிறார்கள்.

கமலத்தின் சகோதரன் தங்கவேலு, மாயாண்டி கொத்தப்பிரியனால் கொல்லப்படுகிறான். சாதித்தளையி லிருந்து இதுவரை தன்னை மீட்டுக்கொள்ளாத கமலத்தின் தந்தை முத்துக்கண்ணு விசுவராயர் அதிர்ச்சிக்காளாகி, சாதி வெறி பிடித்த தருமையா நாட்டார், பெரிய வீட்டு நாயக்கர் ஆகியவர்களை கையில் கத்தியோடு துரத்து கிறார். நாவல் இங்கு முடிவடைகிறது.

நமக்குள் கற்பனையில் சில காட்சிகள் தொடர்கின்றன. கொத்தப் பிரியனைத் தேடிச்செல்லும் பரமசிவம், கொத்தப் பிரியனால் கொல்லப்படலாம். விசுவராயரும் சாதி வெறியர்களால் கொல்லப்படலாம். சாதியில்லை என்ற முழக்கத்தோடு சாகத் தயாரானவர்கள் தங்கவேலுவும், பரமசிவமும். இவர்களோடு விசுவராயரும் கமலமும் சேர்ந்து கொள்ளலாம்.

தாழ்ந்த சாதிப்பையனால் கருவுற்று இப்பொழுது குழந்தை பெற்றுக் கொண்டவள் நீலா. இவளுடைய தந்தை கோபால் குச்சிராயரும் இவர்களோடு சேர்ந்து கொள்ளலாம். ஆனாலும் சாதி சாகப் போவதில்லை.

ஒரு சில மனிதர்களின் கதையை மட்டும் ஆசிரியர் சொல்லி இருக்கிறார். கிராமத்தின் கதையாக நாவல் விரிவடையவில்லை. இடைவழியில் அங்கங்கே நின்று ஆசிரியர் நம்மோடு அழகாகப் பேசுகிறார். சாதி நம்

சமூகத்தில் பல கிளைகள் விரித்துள்ள ஆலமாம். இவற்றில் ஒரு கிளையின் கதையை இந்த நாவல் சொல்லுகிறது.

சாதி இருக்குதடா என்ற குரல்தான் நாவலில் ஓங்கி ஒலிக்கிறது என்று முன்னுரையில் சொல்லிக் கொண்டாலும், சாதியில்லை, சாதி வேண்டியதில்லை என்ற குரலும் தான் கதையில் உரத்து ஒலிக்கிறது. பாசாங்கின் அடிப்படையில்தான் பழமை சாதிப்பித்து தன்னைக்காத்துக் கொள்ள முனைந்திருக்கிறது. பரமசிவமும் தங்கவேலுவும் தங்களைத் தற்காத்துக் கொள்ளும் முயற்சியில்லாமல் சாகிறார்கள். தமிழகத்தில் மீண்டும் எழுச்சி பெறும் சாதிப் பிரச்சினை பற்றி, குறிப்பாக, கள்ளர் சாதி பற்றி ஒரு அழகிய நாவல் என்று இதனைச் சொல்லலாம்.

## பாவண்ணன் 32

பாவண்ணனின் முதல் நாவல் வாழ்க்கை- ஒரு விசாரணை. கிராமத்து வாழ்க்கையை ஒரு குறுக்கு வெட்டுத் தோற்றம் போலச் சித்திரிக்கிறது இந்த நாவல். தொடர்ச்சியான கதை இதில் இல்லை. பல சிறுகதைகளின் தொகுப்பு இந்த நாவல்.

காளியப்பன் குடும்பம் பற்றிய சித்தரிப்புக்கள் வழியே கிராமத்து மனிதர்கள் சொல்லப்படுகிறார்கள். மூர்த்தி, ரைஸ்மில் முதலாளி வீட்டில் வாட்ச் திருடியது போலீசார் மூலம் வெளிப்படுகிறது. மனம் திருந்தினாலும் மூர்த்தி அவதூறு சகிக்க முடியாமல் ஊரை விட்டுப் போய் விட்டான்.

காளியப்பனுக்கு, மாடுகளுக்கு லாடம் கட்டுகிற தொழில். முதலாளி 'டே' என்று அழைப்பான். இவன்

சாமி என்று கும்பிடு போடுவான். கண்ணம்மா காதலித்து ஏமாந்தாள்.

குழந்தை பாப்பாத்தி இறந்து விட்டாள். ரைஸ்மில் முதலாளி வீட்டுக் குழந்தையின் கொலுசைத் திருடிவிட்ட தாக போலீசாரிடம் அடிபட்டு, மயக்கம் தெளியாமல் கிடக் கிறான் காளியப்பன். முதலாளி [illegible] கிடக் கிறது.

கணவனால் கைவிடப்பட்ட தேவகி, தன் மூன்று குழந்தைகளுக்கு விஷம் கொடுத்து தானும் உண்டு செத்து போனாள். அருக்காணியை எங்கு சென்றாலும் சந்தேகப் பட்டு, அவளை அடித்து நொறுக்கி விடுகிறான் ரங்கன். தேவகி குழந்தைகள் சவ அடக்கத்திற்கு, ஒய்யாரியாக ஊரில் பெயரெடுத்த மங்காத்தாள் தன் ஆட்டைத் தந்து விற்கச் சொல்லுகிறாள்.

வடிவேலு தாத்தா, தியேட்டர் முதலாளியின் பூர்வீகம் சொல்கிறார். ஊரில் பெரும் சொத்துடைய பார்ப்பானுக்கு பால்காரியிடம் பிறந்தவன் அவன். முதலாளிகளுக்கு எதிரான குரல் நாவல் முழுதும் இழையோடுகிறது.

ஊரில் மாரியம்மன் கோவிலை விட சாராயக் கடைக்கு முக்கியத்துவம் ஏற்பட்டு விடுகிறது. பாவண்ணனின் நுட்ப மான வர்ணனைகள், அழகிய மொழி ஆகியவற்றின் மூலம் இந்தக் கிராமத்து மனிதர்களை நாம் திரும்பவும் பார்த்துக் கொள்கிறோம். இந்த எளிய மனிதர்களுக்கு வாழ்க்கை மேம்பாடு சாத்தியமில்லை. இந்தச் சோகம், நாவலில் அழுகையாய் வெளிப்படவில்லை. மெல்லிய கோடுகள் மூலம் சித்திரமாய் வெளிப்படுகிறது.

## சி. ஆர். ரவீந்திரன் 35

கொங்கு நாட்டுச் சூழலில், தமிழ் வாசகர்களின் மனத்தைத் தொடும் முறையில் ஒரு காதல் கதை சொல்கிறார் அங்குத்தாய் நாவலில் சி. ஆர். ரவீந்திரன்.

கிராமச்சூழலில் பிஸ்கெட் தொழிற்சாலை உருவாகிறது. வட்டிக்குப் பணம் கொடுக்கும் கிராமத்துப் பெரிய மனிதர்களின் மூலதனத்தில் தொழிற்சாலை உருவாகி நடைபெறுகிறது. நிர்வாகம் செய்பவன் கோபால், இவனுக்கு நிர்வாகம் தெரியும். இலாபத்தைக் குறியாகக் கொண்ட மூலதனக்காரர்கள் தொழிற்சாலை நாகரிகம் தெரியாதவர்கள். கோபால் வெளியேறுகிறான். இவ்வாறு கிராமிய நாகரிகத்திற்கும், தொழில் நாகரிகத்துக்கும் இடைப்பட்ட முரண்பாட்டின் பின்னணியில் நாவல் இயங்குகிறது.

நாவலில் நிறைய மனிதர்கள். வெவ்வேறு குணங்கள். குடும்ப வாழ்க்கையில் உறவு முறிந்தவர்களில் கோபாலும் ஒருவன். அலுவல் பார்க்க வந்த நாகரீக மனிதன் ரவீந்திரன், தொழிற்சாலையில் வேலை பார்க்கும் அங்குத் தாயை காதலிக்கிறான். மனங்களில் மட்டும் கூடு கட்டி வளர்வது இந்தக் காதல்.

கோபால் பற்றியும், ரவீந்திரன் பற்றியும் கிராமம் தொடர்ந்து கவனிக்கிறது, பேசுகிறது. பழைய மாபுகளில் கிராமம் உயிர் வாழ்கிறது. புதியது அதனோடு ஒட்டாது. காதலர் பிரிகின்றனர்.

அங்குத்தாய் பிற குயில்களால் கொத்தி ஒதுக்கப்பட்ட குயிலின் கதை சொல்கிறாள். தொழில் வளர்ச்சிக்கும்,

மனிதர்களுக்கும் இடையில் புதிய உறவுகளுக்கும் இடம் தராத கிராமத்தின் கதை சொல்வது 'அங்குத்தாய்'. நிறுத்தி நிதானமாக சிறு சிறு வாக்கியங்களில் நிகழ்ச்சி களை விவரிப்பது சி. ஆர். ரவீந்திரனின் குணம்.

## மேலும் சில பொதுக் குறிப்புகள்

ஒரு நாவல் படிப்பதென்பது கதை படிப்பது மட்டுமல்ல, அங்கங்கே இடையில் வரும் கிளைக்கதை (சிறுகதை) களைக் கவனித்துப் படிப்பது மட்டுமல்ல. கதைகள் வழியே தெரியவரும் மனிதர்களைப் படிப்பது நாவல் படிப்பில் ஒரு முக்கிய அம்சம்.

கதை எப்படி அமைக்கப்படுகிறது, இதற்குள் இயங்கும் தர்க்கம் என்ன என்பதையும் அறிவுப் பூர்வமாகத் தெரிந்து கொள்வதும் தேவைதான்.

மனிதர் வழியே இயங்கும் வாழ்வை, படிக்கும் வாசகர்களாகிய நமக்குள் அங்கங்கே சில உறவுகள், முரண்கள் படித்துக் கொண்டிருக்கும் பொழுதே தட்டுப் படும். திடீரென்று நம் அனுபவங்கள் புதிய வெளிச்சத்தில் தெரியும். நமக்குள் ஒதுக்கி வைத்திருக்கிற நினைவுகள் மனத்தில் மேல்பரப்புக்கு வந்து தம்மைப் பற்றி நம்மைச் சிந்திக்கத் தூண்டும். நாவல் படிப்பதில் பிற அம்சங்களை விட இதன் முக்கியத்துவம் அதிகம்.

நம்மைச் சமூகத்தோடு, வரலாற்றோடுஇயைபு படுத்திக் காண்பதும் அறிவுபூர்வமான செயல்தான். நாவலுக்குள் இயங்கும் தர்க்கத்தின் வழியே, கலை நமக்குள் ஏற்படுத்தும் நெகிழ்வின் வழியே, இந்த உறவு

எளிதில் சாத்தியப்படும். நாவல் இங்குதான் நமக்கு ஒரு கல்வியாக மாறுகிறது.

[illegible] நாவல் [illegible] என்பதும் [illegible]ல்ல. இவை நாவல் [illegible] [illegible], [illegible]ஆக, அறிவாகத் தொகுத்துக் [illegible] பதாகத் [illegible] பொருள்படும். [illegible] [illegible]வம் [illegible]ம். [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible]றிய கூட. நாவல் நமக்குள் எதாவதொன்றைக் கிளறும். இப்படிப் படித்தால், நல்ல நாவலின் ஒவ்வொரு பக்கமும், ஒவ்வொரு பத்தியும், ஒவ்வொரு வரியும் கூட நமக்குள் எதாவதொரு வகையில் உறவு கொள்ளும். இப்படி படிப்பது தான் நாவலைச் சரியாகப் படித்துக் கொள்வ தாகும். தரமான நாவல்கள்தான் இப்படி நம்மோடு உறவாடும்.

சில நாவல்கள் அரட்டை அடிக்கும். வாசகர்களாகிய நம்மைத் தாழ்த்தி, சிலரை உயர்த்திப் பேசும். நமக்குள் சுதந்திரத்தை எற்படுத்துவதற்குப் பதிலாக எதாவ தொன்றில் நம்மைக் கட்டுப்படுத்தும். மிகை உணர்ச்சி, இலட்சிய வாதம் முதலியவை வாசகனை இறுக்கக் கூடியவை. நாம் அறியாத புதிய பிரதேசங்கள், வாழ்க்கைக் களங்கள், மனிதர்கள், நம்மைச் சூழ எங்கும் உள்ளன உள்ளனர். இவற்றோடு/ இவர்களோடெல்லாம் நாம் உறவாட வேண்டும். நாவல் கலை இந்த உறவுக்குப் பெரிதும் பயன்படும்.

நாவல் என்றால் என்ன என்ற இலக்கணம் கூட முக்கியமில்லை. குறிப்பிட்ட சில இலக்கணங்களுக்குள் நாவலை அடைக்கவும் முடியாது. இவை எச்சரிக்கைகூட அல்ல. பாடநூலுக்கு இம்மாதிரி இலக்கணங்கள் தேவைப் படலாம் வாசகனாக இருப்பதற்கு இவை இன்றியாமை யாதவை அல்ல. நாவலோடு நாம் ஒரு கலந்துரையாடலில் ஈடுபடுகிறோம். இந்த உரையாடலைப் படித்து முடித்த

பின்னரும், நினைவுக்கு வரும் பொழுதெல்லாம் இந்த உரையாடல் தொடரும். இதற்கு முடிவில்லை.

எண்பதுகளில் வெளிவந்த நாவல்களைப் பல அர்த்தங்களில் வாசகர்கள் தம் தேவைகள், ஆர்வங்களுக்கேற்றவாறு படிக்கலாம். நாவலுக்குள் பல குரல்கள் ஒலிக்கின்றன. அதிகாரி, வணிகர், காமுகர், சன்னியாசி, ஆதிவாசி என பல குரல்களை நாவலுக்குள் இனங் காணலாம். இவற்றில் ஆதிக்கத்தின் குரல் உண்டு. எதிர்ப்பின் குரலும் உண்டு. சமூகத்தின் ஓரங்களுக்கு ஒதுக்கப்பட்டவர், பெண்கள், தாழ்த்தப்பட்டவர், ஆதிவாசிகள் ஆகியவர்களின் குரல்கள் அடிமைப்படுத்தப் பட்டவர்களின் குரல். இவர்களுக்குள் எதிர்ப்புக் குரலும் உண்டு. வாசகர் தமக்குள் பதிந்திருக்கிற குரல், எதன் குரல் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். இன்றைய சமூக நிலைமைகளில் எதிர்ப்புக் குரலின் தேவையறிந்து படிக்க வேண்டும். வாசகனுக்குள் உள்ள எதிர்ப்புக் குரல் தெளிவானதாக, உறுதியானதாக இருக்கும் என்றால் வாசிக்கப்படும் நாவலின் வடிவத்தை தனக்கேற்றதாக மாற்றிக் கொள்ளமுடியும். ஆசிரியரின் குரல் அல்லது ஆசிரியரின் பிரதிதான் மூலப்பிரதியாக இருக்க வேண்டியதில்லை. மூலம் எது என்பதைத் திட்ட வட்டமாகக் கண்டு கொள்வதிலும் சிரமங்கள் இருக்கக் கூடும். மூலப்பிரதி என்று ஒன்றில்லாமல் கூட இருக்கலாம். பிரதி என்பது பல பிரதிகளில் ஒன்று. இந்த உண்மையை அறிந்து கொண்ட வாசகன், தனக்கான பிரதியைக் கண்டறிந்து வாசிக்க வேண்டும். மிகவும் நவீனமான அறிவு என்று இந்த அறிவு சொல்லப்பட்டாலும், காலம் காலமாக இத்தகைய அறிவோடு தான் வாசகர்கள் நூல்களை, மனிதர்களை, வரலாற்று நிகழ்ச்சிகளை, இயற்கையைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். இத்தகைய புரிதலை மேலும் சீராக வரையறுத்துக் கொள்வது அவசியம் தான்.

எண்பதுகளின் தமிழ் நாவல்கள் இவ்வாறு பல வகையான வாசிப்புக்கு இடம் தருகின்றன. தரமான நாவல்கள் என்று மதிக்கப்படுவனவற்றை ஒருமுறை படித்தால் போதாது. கால இடைவெளியோடு மேலும் சிலமுறை படிப்பதன் மூலமே, நாவலின் பல்வகைப் பரிமாணங்களையும், நாவலுக்குள் ஒலிக்கும் வித்தியாசமான குரல்களையும் கண்டுகொள்ள முடியும். எண்பதுகளில் இத்தகைய தரமான நாவல்கள் எழுதப்பட்டுள்ளன. 'ஜே. ஜே. சில குறிப்புகள்' 'எசுவின் தோழர்கள்' 'நதிமூலம்' 'நைவேத்தியம்' 'ஒற்றன்' 'அடிமைகள்' ஆகிய நாவல்களை, என்னைப் பொறுத்தவரை மிகச் சிறந்த நாவல்கள் எனக் கருதுகிறேன். நண்பர்கள், வாசகர்கள் இவற்றைத் தரமான நாவல்கள் என்று ஏற்க வேண்டுமென்று கட்டாயமில்லை. தரப்படுத்தலைக்கூட நண்பர்கள் மறுக்கலாம் அல்லது மேலும் வேறு சில நாவல்களை தரமான / மிகச் சிறந்த நாவல்களென்று தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். நாவல்கள் படிக்கப்பட வேண்டும். புரிந்து கொள்ளப்பட வேண்டும். தொடர்ந்து திறனாய்வுக்குட்படுத்த வேண்டும். இத்தகைய செயல்கள் மூலம் மனிதர்கள் (நாவலாசிரியர்களும் வாசகர்களும்) வளர்ச்சி பெற வேண்டும். சமூக உணர்வின், கலை உணர்வின் தரம் அதிகரிக்க வேண்டும். மனித விடுதலைக்கு இத்தகைய புரிதலும் வளர்ச்சியும் உறுதுணையாக அமைய முடியும். தமிழ் நாவல்கள் மேலும் வளர்ச்சி பெறுவதற்கான வாய்ப்புகள் நிறைய உள்ளன. தமிழ் வளர வேண்டும்.

தமிழ் நாவல்கள், தமிழ் இலக்கியம் வளர்ச்சி பெற வேண்டும். இவற்றுக்கான பெரு முயற்சி நமக்கு தேவை.

—●—

## பிற்சேர்க்கை

தமிழ் நாவல்கள் பட்டியல்
(இந்நூலில் பயன்படுத்தப்பட்டவை)

1. க. நா. சுப்ரமணியம்
   கோதை சிரித்தாள் (1986)
   பித்தப் பூ (1987)
   தாமஸ் வந்தார் (1988)
   அவதூதர் (1988)

2. லா. ச. ராமாமிர்தம்
   கல் சிரிக்கிறது (1987)
   பிராயச்சித்தம் (1989)

3. ஜெயகாந்தன்
   சுந்தரகாண்டம் (1982)

4. சுந்தரராமசாமி
   ஜே. ஜே. சில குறிப்புகள் (1981)

5. இந்திரா பார்த்தசாரதி
   ஏசுவின் தோழர்கள் (1987)

6. அசோகமித்திரன்
   ஆகாயத்தாமரை (1980)
   ஒற்றன் (1985)
   மானசரோவர் (1989)

7. சா. கந்தசாமி
   அவன் ஆனது
   ஆரிய வம்சம் (1983)
   தொலைந்து போனவர்கள் (1983)

8. நீல. பத்மநாபன்
தேரோடும் வீதி (1987)

9. ராஜம் கிருஷ்ணன்
கூட்டுக் குஞ்சுகள் (1980)
சேற்றில் மனிதர்கள் (1982)
மாறுபட்டத்தின் மகரந்தங்கள் (1984)
மண்ணகத்துப் பூந்துளிகள் (1988)
புதிய சிறகுகள் (1985)
தோட்டக்காரி (1989)

10. பூமணி
நைவேத்தியம் (1985)

11. நாஞ்சில் நாடன்
மாமிசப் படைப்பு (1981)
மிதவை (1986)

12. ஆ. மாதவன்
கிருஷ்ணப்பருந்து
தூவானம் (198.)

13. விட்டல் ராவ்
மீண்டும் அவளுக்காக (1966)
மற்றவர்கள் (1984)
காலவெளி (1988)
நதிமூலம் (1983)

14. பிரபஞ்சன்
காதல் எனும் ஏணியிலே
ஆண்களோடு பெண்களும் (1985)
சந்தியா (1989)
சுகபோகத் தீவுகள் (1989)

15. சின்னப்பபாரதி

சங்கம்

16. அ. சமுத்திரம்

வளர்ப்பு மகள் (1980)
இல்லந்தோறும் இதயங்கள் (1982)
புதிய திரிபுரங்கள் (1982)
கேள்வித் தீ (1980)
ஊருக்குள் ஒரு புரட்சி (1980)
உயரத்தின் தாழ்வுகள்
வெளிச்சத்தை நோக்கி (1987)

17. கே. டேனியல்

அடிமைகள் (1984)
தண்ணீர் (1987)
கானல் (1986)

18, கலைஞர் மு. கருணாநிதி

தென்பாண்டிச் சிங்கம் (1983)

19. சுஜாதா

இரத்தம் ஒரே நிறம் (1983)
கனவுத் தொழிற்சாலை (1980)
பிரிவோம் சந்திப்போம் (1983)
பதவிக்காக (1988)

20. சுப்ரபாரதிமணியன்

மற்றும் சிலர் (1987)

21. எஸ். சங்கர நாராயணன்

நந்தவனத்துப் பறவைகள்
மானுடசங்கமம் (1986)

22. ராஜேசுவரி பாலசுப்ரமணியம்
    ஒரு கோடை விடுமுறை (1981)
    தில்லையாற்றங்கரை

23. தோப்பில் முகம்மது மீரான்
    கடலோர கிராமத்தின் கதை (1988)

24. காவேரி
    ஆற்றுக்குப் போகணும் (1986)

25. சூரியகாந்தன்
    மானாவாரி மனிதர்கள் (1988)

26. சிவகாமி
    பழையன கழிதலும் (1989)

27. தமிழவன்
    ஏற்கனவே சொல்லப்பட்ட மனிதர்கள் (1985)

28. ஹெப்சிபா ஜேசுதாசன்
    மா - னீ (1982)

29. அஸ்வகோஷ்
    சிறகுகள் முளைத்து

30. சாருநிவேதிதா
    எக்ஸிஸ்டென்சியலிசமும் ஃபேன்சி பனியனும் (1989)

31. சி. எம். முத்து
    கறிச்சோறு (1989)

32. பாவண்ணன்
    வாழ்க்கை ஒரு விசாரணை

33. சி. ஆர். ரவீந்திரன்
    அங்குத்தாய் (1988)





ஞானி

மனிதநேயத்தைத்
தன் வாழ்க்கையிலும் கடைப்பிடிப்பவர்.
ஆரோக்கியமான விவாதத்திறனும்,
தீர்க்கமான திறனாய்வுப் பார்வையும்
கொண்ட மார்க்சீயச் சிந்தனையாளர்.

இன்றைய
இளம் படைப்பிலக்கியவாதிகளில் பலரும்
ஞானியின் நிழலில் சற்றேனும் அமர்ந்து
இளைப்பாறியிருக்கிறார்கள்.

வரலாறு, பண்பாடு, பெண்ணியம், தலித்தியம்
யாவற்றிலும் பாசாங்கற்ற பார்வைகள் கொண்டவர்.
அடித்தள மக்களின் சுதந்திரத்துக்காக
அயராது குரல் கொடுப்பவர்.